# செந்தமிழ்ச் செல்வி

உள்ளுறை



சிலம்பு-௪௯] வள்ளுவர் ஆண்டு ௨00௩, மாசி (Mar'72) [பரல்-௭

## ‘செந்தமிழ்ச் செல்வி’

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. பேராசிரியர், முத்து இராசாக்கண்ணனுர் அவர்கள்,
எம்.ஏ., பி.ஓ.எல்.
இயக்குநர், தமிழக அரசு தமிழ் வளர்ச்சித் துறை, சென்னை 1.

உ. ,, ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை.

ரு. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்டி.,
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்.

ச. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு) (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

ரு. திரு. கு. பரமசிவன் அவர்கள், எம்.ஏ., டிப். லிங்.,
தமிழ் விரிவுரையாளர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

சு. சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை அவர்கள்,
முன்னாள் கழகப் புலமையாளர், சென்னை.

எ. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.,
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ00௩, மாசி | பரல் |
| --- | --- | --- |
| ௪௬ | மார்ச்சு 1972 | ௭ |


## பதிப்புத் துறையிற் பட்டறிவு

(ஆ)

சென்ற நான்காம் பரலில் பண்டித நாவலர் வேங்கடசாமி நாட்டாரவர்கள் தம் கெழுதகை நண்பர் திரு அ. மு. சரவண முதலியாரவர்களைத் துணைக்கமர்த்தி எழுதிய திருவிளையாடற் புராணம் பதவுரை விளக்கவுரை பற்றிய செய்திகளை யறிந்தோம். இப்பரலின்கண் திருப்புகழ், கல்லாடம் ஆகியவற்றின் பதிப்புக்களைப் பற்றிய குறிப்புக்களைக் காண்போம்.

முருகப் பெருமான் திருவருள் கைவரப்பெற்ற அருணகிரிநாத அடிகள் திருமுருகன்மீது 16,000 சந்தப்பாக்களைப் பாடினர் என்றும், அவற்றுள் 1,300 பாட்டுக்களளவே கிடைத்திருக்கின்றன என்றும் கூறப்பெறுகின்றன.

செல்வி சிலம்பு 45, பரல் 12இல் 3 ஆவது கட்டுரையிற் குறிப்பிட்ட 1839 ஆம் ஆண்டு கௌரி பஞ்சாங்கத்திலுள்ள விலைப் பட்டியில் ''108 திருப்புகழ்', என்ற நூல் காணப்பெறுகின்றது. அதுவே திருப்புகழின் முதற் பதிப்பாகும். அது மழவை மகாலிங்கையரால் பதிப்பிக்கப்பெற்றது. அச்சுக் கூடத்தின் பெயர் மட்டும் தெரியக்கூட வில்லை.

1873இல் திரு சி. நாராயணசாமி முதலியாரால் சென்னை, பிரபாகர வச்சுக்கூடத்தில் அச்சிடப்பெற்ற திருப்புகழ் ஏழாம் பதிப்பு தமிழகவரசு ஆவணக்களரி தமிழ்நூல் விவரணப் பட்டியிற் காணப்பெறுகின்றது. அதுவே, 1874, 1875, 1880,

1881, 1883 ஆகிய ஆண்டுகளில் மீண்டும் மீண்டும் பதிப்பிக்கப் பெற்றதாகத் தெரிகின்றது.

1885இல் நூறு பாடல்களைக் கொண்ட திருப்புகழ் முதற் பாகம் முதற் பதிப்பு திரு. ஊ. புட்பரதச் செட்டியாரால் தமது கலாரத்நாகரம் அச்சுக் கூடத்தில் அச்சிடப் பெற்றுள்ளது.

அதன் இரண்டாம் பதிப்பு 1889 இல் அதே அச்சுக் கூடத்தில் அச்சிடப்பெற்றுள்ளது. அதை யடுத்து இன்னொரு நூறு பாடல்களைக் கொண்ட திருப்புகழ் இரண்டாம் பாகம் அதே ஆண்டிலும், மற்றும் நூறு பாடல்களைக் கொண்ட திருப் புகழ் மூன்ரும் பாகம் 1890ஆம் ஆண்டிலும், மற்றும் நூறு பாடல்களைக்கொண்ட திருப்புகழ் நான்காம் பாகம் அதே ஆண்டி லும் வெளிவந்துள்ளன. எனவே, திரு. ஊ. புட்பரதச் செட்டியா ரவர்கள் தாம் ஏட்டுச் சுவடியிலிருந்த திருப்புகழ் சந்தப்பாட்டுக் களில் நானூறை மட்டும் நான்கு பாகங்களாக வெளியிட் டுள்ளனர் என்பது நன்கு விளங்குகிறது.

**1894 இல் திருப்புகழ் முதற்பாகம்—முதற் பதிப்பு 603 பாடல்கள் :**

இதன் முகப்பில் 'இது பல கையெழுத்துப் பிரதி ரூபங் களைக் கொண்டு திருப்பாதிரிப்புலியூர் வித்துவான் சிவசிதம்பர முதலியாரவர்களால் பரிசோதிப்பித்து வடக்குப்பட்டு த. சுப்பிர மணிய பிள்ளையவர்களால் சென்னை இந்து தியாலஜிகல் அச்சுக்கூடத்திற் பதிப்பித்தது' எனக் குறிக்கப்பட்டுள்ளது.

திருவாளர் வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் சீர் கருணிக வகுப்பைச் சேர்ந்தவர். மாவட்ட நீதிபதி (District Munsiff) ஆகப் பணியாற்றியவர். முருகப் பெருமானிடத்தில் நெஞ்சமுழுந்திய அன்பினராவர். சிவபெருமானுக்குத் தேவார திருவாசகங்கள் எவ்வளவு உகந்த புகழ்ப் பாடல்களா யிருக் கின்றனவோ அதுபோல் முருகக் கடவுளுக்கு மிகவும் விருப்ப மானது அருணகிரிநாதர் அருளிய 'திருப்புகழ்' என்னுஞ் செஞ் சொற்பனுவல் எனக் கருதுவாராயினர். எனவே, 1871 முதல் திருப்புகழ்ப் பாடல்களைத் தொகுப்பதற்கு முயன்று வருவா ராயினர். அவர்கள் தொகுப்பதற்கு எடுத்த முயற்சி, அடைந்த வருத்தம், பெற்ற உதவி ஆகியவற்றைப் பற்றித் தாம் எழுதிய முகவுரையிற் சில பகுதிகளை அடியிற் காண்க :

"அது முதற் பல இடங்களிலிருந்து பல பிரதிகளை வருவித்து ஆயிரத்திருநூறு பாடல்கள் சேகரஞ் செய்தேன். புத்தகந்தோறும் பாடல்கள் வேறுபட்டிருந்தமையால்

அவற்றையெல்லாம் பரிசோதித்து ஒழுங்குபடுத்துவது அதிக பிரயாசமாக இருந்தது. திருப்பாதிரிப்புலியூர் வித்துவான் திரு. சிவசிதம்பர முதலியாரவர்கள் அதிக சிரத்தையும் முயற்சியும் உடையவர்களாதலால் என் எண்ணத்தை முடிப் பித்தார்கள். ஒவ்வொரு பிரதியிலும் பாடல்கள் அதிகப் பிழை யாயும் ஒன்றுக்கொன்று அதிக வித்தியாசமாயும் இருந்தமை யால் அவைகளைச் சீர்ப்படுத்த மேற்படி முதலியாரவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி அளவிறந்தது. சில புத்தகங் களிற் சில பாடல்கள் அடிகள் மாற்றப்பட்டிருந்தன. சில வற்றிற் பொதுவான பாடல்கள் தலங்களுக்கும், ஒரு தலத்துக் குரிய பாடல் மற்றொரு தலத்துக்குமாகத் திருப்பப்பட் டிருந்தன. இவ்வேறுபாடுகளை யெல்லாம் பிரதிகளைக் கொண்டு கூடிய வரையில் நீக்கிச் சுத்தஞ் செய்யப்பட்டன. இவ்வளவு தூரம் ஆராய்ச்சி செய்து ஒழுங்குபடுத்தியும், பாடல்களெல்லாம் அருணகிரிநாத சுவாமிகள் திருவாக்கி லிருந்து வந்தபடியே கலப்பில்லாமல் இருக்கின்றனவென்று சொல்லத் துணிந்திலன். ஓலைப் புத்தகங்கள் பலவற்றிற் பலவாருக எழுதப்பட்டிருக்கும் பாடல்கள் இப்போது ஒருவாறு ஒழுங்காகத் திரட்டி எல்லோரும் படிப்பதற்குச் சுலபமாக ஒரு புத்தகமாக்கப்பட்டன என்று மாத்திரம் சொல்லக் கூடும். இப்புத்தகத்தில் எவ்வகைப் பிழைகளிருந்தாலும் அவைகளை யெல்லாம் பொறுப்பதன்றி அவற்றை அடியேனுக்குத் தெரி விக்கும்படிக்கும் கற்றுணர்ந்த பெரியோர்களை வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"நான் பாடல்கள் சேகரஞ் செய்யுங் காலத்தில் தங்களிட மிருந்த பிரதிகளைத் தந்த புண்ணியவான்களுக்கும், பிறரிடத் திருந்தவைகளை வருவித்துத் தந்த அன்பர்களுக்கும் அநேக வந்தனம் அகமகிழ்ந்தளிக்கின்றேன் இவர்களிற் கருங்குழி ஞா. ஆறுமுக ஐயரவர்களை முக்கியமாகச் சொல்ல வேண்டும். இவர் மேற்கூறிய இரண்டு வகைப்பட்ட உதவிகளும் செய்த தன்றி அநேக நாள் என்னுடன் இருந்தும் தாம் தனியே இருந்தும் பதிப்பதற்குப் பலவித வேலை செய்தும் பேருதவி புரிந்தனர். இவ்வளவும் இவர் பொருள் நசையினுலல்லாமல் திருப்புகழ் வெளியாக வேண்டுமென்கிற பேரவாவினுலேயே செய்தமையால் இது மிகவும் வியக்கற்பாலதாம்.

"பாடல்களை வரிசைப்படுத்தியபொழுது முருகக் கடவு ளுக்கு முக்கியமான படைவீடுகளாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்று தோருடல், பழமுதிர்சோலை ஆகிய ஆறு தலங்களின்

பாடல்கள் முறையே முதலில் வைக்கப்பட்டன. பஞ்ச பூத தலங்களாகிய காஞ்சீபுரம், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்னும் இவற்றின் பாடல்கள் முறையே பின்னும் வைக்கப்பட்டன. அப்பாலுள்ள தலப் பாடல்களை நாடுவாரிப் பிரித்து வைக்கப்பட்டன. பொதுப் பாடல்கள் இறுதியில் வைக்கப்பட்டன.

"முதலில் ஓலைப் புத்தகங்களிலுள்ள பாடல்களைக் கடிதத்திற் பெயர்த்தெழுதியும், திருத்தியான பின்பு அவைகளை வேறு கடிதங்களில் எழுதியும் உதவிபுரிந்த நண்பர்களுக்கும், இன்னும் இப்புத்தகம் அச்சுக்கு வருவதற்கு வேண்டிய எவ்விதமான உதவிபுரிந்த அன்பர்களுக்கும் மனப்பூர்வமாக வந்தனஞ் செலுத்துகின்றேன்.

"திருப்புகழ் அச்சிட வேண்டும் என்று பிரதிகள் சம்பாதிக்கத் தொடங்கினதுமுதல் இது வரையில் எனக்குண்டான பிரயாசை மிக அதிகமே. திருப்புகழ் அச்சிடப்பட்டு வெளிவர வேண்டும்; அதை அன்பர்கள் வாசிக்க வேண்டும் என்னும் ஆசையே இவ்வளவு பிரயாசைக்குங் காரணமாயிருந்தது.

'சேகரமான ஆயிரத்திருநூறு பாடல்களையும் அச்சிட்டு முடித்தபின்பு ஒரே புத்தகமாக்கி வெளிப்படுத்த உத்தேசித்திருந்தேன். அச்சிடத் தொடங்கி இரண்டு வருட காலமாகியும் பலவித அசந்தர்ப்பத்தால் இது வரையில் 603 பாடல்களே முதற்பாகமாக அச்சிட்டு வெளிப்படுத்தி யிருக்கிறேன். எஞ்சிய 600 பாடல்களையும் இரண்டாம் பாகமாக விரைவில் வெளிப்படுத்த முயலுகிறேன். ஆறுமுகக் கடவுள் அநுக்கிரகிப்பாராக.

திருத்தருப்பூண்டி
செப்டம்பர் 1894.

வ. த. சுப்பிரமணிய பிள்ளை.

திருப்புகழ் முதற் பாகம்-இரண்டாம் பதிப்பு 1909இல் வெளியிடப்பட்டது. அதன் முகவுரையிலுள்ள அடியிற் கண்ட குறிப்பும் படித்துணரற்பாலது.

"இந் நூலின் முதற்பதிப்பில் அக்காலந் தெரியாதிருந்து பின்பு தெரிந்த பிழைகளெல்லாம் விலக்கப்பட்டன. வேறு தலங்களுக்குரியவை என்று வெளியான பாடல்களை எடுத்துவிட்டு அவைகளுக்குப் பதிலாகச் சரியான பாடல்கள் வைக்கப்பட்டன.

"மிகுந்த பிரயாசை எடுத்துக்கொண்டு திருப்புகழ்ப் பாடல்களை யெல்லாம் செம்மையா யாராய்ந்து அவற்றினின்றும் வெளியான அருமையான சங்கதிகளை 'அருணகிரிநாத சுவாமிகளின் சரித்திர ஆராய்ச்சி' எனப் பெயர் புனைந்து என் குமாரன் செங்கல்வராயன் எழுதினதை இதன்கண் சேர்ந்திருக்கிறேன்.

"இவ்விரண்டாம் பதிப்புக் கூடுமான வரையில் திருத்தமான தென்று சொல்லலாம். என்றாலும் பிழைகளிருக்கலாம்.

"திருப்புகழ் மூன்றும் பாகத்துக்காக இத்தனை காலம் பிரயத்தனப்பட்டும் 70 பாடல்கள் மட்டுந்தான் கிடைத்திருக்கின்றன. ஏட்டுப் புத்தகங்கள் வைத்திருப்பவர்கள் தயவு செய்து அவைகளை அனுப்பினால் இன்னும் 30 பாடல்கள் சம்பாதித்து நூறு பாடல்களேனும் அச்சிடலாம். இனித் தாமதஞ் செய்யாமல் அவைகளைக் கூடிய விரைவில் அனுப்பும்படி புண்ணியவான்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

சென்னை
சனவரி 1909.

வ. த. சுப்பிரமணிய பிள்ளை.

1909இல் திருப்புகழ் இரண்டாம் பாகம்-முதற் பதிப்பு.

இதன் முகப்பில் திருப்பாதிரிப்புலியூர் வித்துவான் சிவசிதம்பர முதலியாரும், சேலம் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் சரவணப் பிள்ளையும் இதனைப் பரிசோதித்துத் தந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதனை வெளியிட்ட திருவாளர் வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தமது முகவுரையில் குறிப்பிட்டிருப்பதும் அறிதற்பாலது.

"திருப்புகழ் முதற் பாகத்தை 1894இல் வெளிப்படுத்தின போது இரண்டாம் பாகத்தை விரைவில் வெளிப்படுத்த முயலுவதாக முகவுரையில் எழுதியிருந்தேன். என்னாலான வரையில் முயன்றும் இக்காரியத்தை முடிக்க இவ்வளவு காலஞ் சென்றது.

"மத்தியில் திரிசிரபுரத்திலிருக்கும் ஆறுமுக நயனார் அவர்கள் ஏட்டுப் பிரதி ஒன்று சம்பாதித்து அனுப்பினார்கள். அதில் என்னிடம் முன் அகப்படாத பாடல்களாக 30 பாடல்கள் வரையில் அகப்பட்டன. இப்பாடல்கள் கிடைத்தது புதையலகப்பட்டது போலும்.

"திருப்புகழ் இரண்டாம் பாகம் அச்சிட்டதுடன் நில்லாமல் இன்னும் ஏட்டுப் பிரதிகள் சம்பாதிக்கப் பல இடங்களிலும் பிரயத்தனஞ் செய்து கொண்டிருக்கின்றேன். இது விஷயத்தில் மேலே சொன்ன ஆறுமுக நயனாரவர்கள் மெத்த உதவி புரிந்து வருகிறார்கள். அவர்களைப்போல் இன்னுஞ் சிலர் உதவி புரிந்தால் மிகவும் அநுகூலமாயிருக்கும். நூறு பாடல்கள் சேகரமானவுடன் அச்சிட்டு வெளிப்படுத்த உத்தேசித்திருக்கின்றேன். சுப்பிரமணியக் கடவுள் துணை செய்வாராக."

வானரமதுரை,
அக்டோபர் 1901. } வ. த. சுப்பிரமணிய பிள்ளை.

திருத்தணிகை முருகனிடம் பதிந்த சிந்தையராய திருவாளர் வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பதித்து வெளியிட்ட திருப்புகழ் முதற்பாகம் 2 பதிப்புக்களும், இரண்டாம் பாகம் முதற் பதிப்பும் விற்று முடிந்தபின் அவர்கள் திருமக்களான திருவாளர் வ. சு. சண்முகம் பிள்ளை, திருவாளர் வ. சு. செங்கல்வராய பிள்ளை ஆகிய இருவரும் சேர்ந்து தாம் அரிதின் முயன்று சேர்த்த புதுப்பாடல்களுடன் 1304 பாடல்களைப் பிரித்துப் பாகுபடுத்தி ஆறுபடை வீடுகளைப் பற்றியுள்ள 450 பாடல்களைந் திருப்புகழ் முதற்பாகம் மூன்றும் பதிப்பாக 1921-லும், பஞ்சபூத தலங்கள், காசி முதல் இராமேசுவரம் வரையிலுள்ள 5+5 பாடல்களைத் திருப்புகழ் இரணடாம் பாகம் இரண்டாம் பதிப்பாக 1923-லும், இவ்விரண்டிலுமல்லாத 310 பொதுப் பாடல்களும், அருணகிரிநாதர் அருளிய திருவகுப்பு, கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி ஆகிய நான்கு நூல்களும் சேர்த்துத் திருப்புகழ் மூன்றும் பாகம் முதற் பதிப்பாக 1926-லும் பதிதது வெளியிட்டுள்ளார்கள்.

இம் மூன்றும்பாகத்தின் பின் இணைப்பாகத் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் எழுதிய திருப்புகழ்ப் பாடல்கட்குச் சந்தக் குழிப்புப் பட்டியும், அருணகிரிநாதர் சரித்திர ஆராய்ச்சியும், திருப்புகழ் ஆராய்ச்சியும், நக்கீரர் அருளிய திருமுருகாற்றுப்படையும் சேர்க்கப் பெற்றிருக்கின்றன.

திருப்புகழ் முதற்பாகம் மூன்றும் பதிப்பின் முகவுரையில் அதன் பதிப்பாசிரியர் இருவரும் கூறுவது :

"பதினாறாயிரந் திருப்புகழ்ப் பாக்களில் இப்பொழுது கிடைத்தனவாக நாமெண்ணி.விருப்பன 1304 பாடல்களே

யாகின்றன. ஏனைய எங்கு புக்கன? வேறெந்த நாட்டிலாவது வேறெந்த மொழியிலாவது இத்துணை யருமைவாய்ந்த நூலொன்றுளதாயின் அந்நாட்டினராவது அம்மொழியபிமானிகளாவது இத்துணை ஊக்கக்குறைவா யிருப்பார்களா? தமிழபிமானியாயுள்ள ஒவ்வொருவரும் தம்மாற் கூடிய வரையிற் பிரயாசைப்பட்டால் இன்னமும் பாடல்கள் கிடைக்குமென்பது எமது துணிபு. சேதுமன்னர் போன்ற செந்தமிழ்ச் செல்வர்களும் தென்னுட்டு மடாதிபதிகளும் இந்நன் முயற்சியை மேற்கொள்ளுமாறு அவர்களை மிகவும் வேண்டிக்கொள்கின்ரும்.

"மற்ற இரண்டு பாகங்களும் விரைவில் வெளிவருமாறும் திருப்புகழ் ஓலைப்புத்தகங்கள் தம்மிடத்திருப்பனவற்றைத் தந்தும் பிறரிடத்திருப்பனவற்றைத் தரும்படி அவர்களைத் தூண்டியும் அன்பர்கள் உதவுமாறும் திருத்தணிகேசன் திருவருள் கூடுமாறு அவரது திருவடிகளைத் தியானிக்கின்றேம்"

சென்னை, வ. சு. சண்முகம் பிள்ளை
16-5-1921. வ. சு. செங்கல்வராய பிள்ளை

மூன்ரும் பாகம் முதற் பதிப்பு முகவுரையில் மேலே குறிப்பிட்ட பதிப்பாசிரியர் இருவரும் கூறுவது:

"திருப்புகழ் ஓலைப்புத்தகங்கள் இருக்கும் இடங்களை அன்பராயினுர் தேடி எஞ்சிய ஏடுகள் நைஞ்சு மறையுமுன் புதுப்பாடல்களைச் சேகரிக்குமாறு யாம் மிகவும் வேண்டுகிரும்".

31-10-1926.

திருவாளர் வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் முருகப் பெருமான் திருப்பெயரையே தாங்கியவராய், தணிகை முருகனையே தமது வழிபடு கடவுளாகக் கொண்டவராய்த், தம் வாழ்நாளெல்லாம் அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்களைச் சேகரிப்பதிலேயே ஈடுபட்டவராய் 1231 பாடல்களைத் தொகுத்து இரண்டு பாகங்கள் வெளியிட்டு, முதற் பாகம் இரண்டாம் பதிப்பை வெளியிட்ட மறுநாளே-அஃதாவது 1909 ஏப்ரல் 17ஆம் நாள் திருத்தணிகைப் பெருமான் திருவடி நீழலடைந்தனர். அவர்கள் பெற்ற நன்மக்கள் மூவரும் சண்முகம், செங்கல்வராயன், ஆறுமுகம் என முருகப்பெருமான் திருப்பெயரையே தாங்கினவர்களாய்த் தந்தையாரைப்

போலவே திருப்புகழ்ப் பாடல்களைத் தொகுதிப்பதிலே ஈடுபட்ட னர். திரு. சண்முகம் பிள்ளையவர்களின் ஒரே மகனுர் பெயர் மயிலேறும்பெருமாள் என்பதும், திரு. செங்கல்வராய பிள்ளை யவர்கள் ஒரே மகனுர் பெயர் தணிகைநாயகம் என்பதும், திரு. ஆறுமுகம் பிள்ளையவர்கள் ஒரே மகனுர் பெயர் தேவசேனுபதி என்பதும் வியந்து போற்றற்குரியனவாகும். இவர்கள் எல்லோருமே பட்டம் பெற்ற பெருமக்களாவர் என்பதும் மகிழ்ச்சிக்குரியதாகும்.

திருவாளர் வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் மாவட்ட நீதிபதியாகப் பல மாவட்டங்களில் பணியாற்றியமையால் தாம் வாழ்ந்த நாளில் பல விடங்களிலும் சென்று செய்த முயற்சியாலும் தமது செல்வாக்காலும் சேகரித்த பாடல்கள் 1273ஆகும். அவர் தம் மூத்தமகனுர் திருவாளர் வ. சு. சண்முகம் பிள்ளையவர்களும் மாவட்ட நீதிபதியாகப் பல மாவட்டங்களில் பணியாற்றியுள்ளனர். அடுத்த திருமகனுர் திருவாளர் வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் ஆவணப் பதிவுத்துறையில் மேலதிகாரியாகப் பலவாண்டுகள் பணிபுரிந்தனர். இவ்விருவர் முயற்சியினுல் சேகரிக்கப்பெற்ற பாடல்கள் 31 ஆகும். இவர் கட்குக் கிடைக்கப்பெற்ற பல சந்தப் பாடல்கள் அருணகிரி நாதர் வாக்கல்லவென்று தள்ளப்பட்டனவாகும்.

ஆராய்ச்சிப் பேரறிஞர் திருவாளர் தி. வி. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் தாம் எழுதிய '13, 14, 15ஆம் நூற்றுண்டுகள் தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் நூலில் திருப்புகழ் என்ற தலைப்பில் 'இந்நூலில் இக்காலத்தில் கிடைத் துள்ள பாடல்கள் 1307 ஆகும்' என்றே குறிப்பிட்டுள்ளனர்.

'திருப்புகழமிர்தம்' இதழாசிரியர் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் 1965இல் தாம் பதிப்பித்த 'திருப்புகழ் முழுவதும்' என்ற நூலில் முன்னுரையில் "காலப்போக்கில் ஆங்காங்கு ஓலைச்சுவடிகளைப் போற்றுவார் அற்றுப் பல பாடல்கள் மறைந்துவிட்டன. வடக்குப்பட்டு, உயர்திரு சுப்பிரமணிய பிள்ளையவர்களும் அவர்களுடைய திருமைந்தர் உயர்திரு வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்களும் ஏடு தேடி அரும்பாடுபட்டுத் திருப்புகழ்ப் பாடல்களைத் தொகுத்து ஒழுங்கு செய்து 1311 பாடல்களை 3 பகுதிகளாக வெளியிட்டனர்" என்று எழுதியுள்ளனர்.

இவர்கள் பதிப்பில் 1311 பாடல்கள் காணப்படுவதோடு முன்னிணைப்பில் அதிகமாகக் கிடைத்துள்ள பாடல்கள் என

எட்டுப் பாடல்கள் பதிக்கப்பெற்றிருக்கின்றன. அவற்றையும் சேர்த்தால் 1319 பாடல்களாகும்.

1935 திருப்புகழ் சைவசித்தாந்த மகாசமாச வெளியீடு

இதன்கண் 1361 பாடல்கள் அகர வரிசையில் அமைக்கப் பெற்றிருக்கின்றன. மேலே குறிப்பிடப்பெற்ற பதிப்புக்களில் 1319 பாடல்கட்குமேல் இல்லை என்பது இங்கே கூர்ந்து கவனித்தற்குரியது.

இது சமாசத்தின் செயலாளர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரால் வெளியிடப்பட்டுள்ளது இந்நூலுக்கு இவர் எழுதிய முகவுரையிற் சில பகுதிகள் அடியில் வருமாறு :

"பல ஏட்டுப் பிரதிகளை ஒப்புநோக்கியதாற் கிடைத்த நன்மை வேறொன்றுமுண்டு. இதுவரை அச்சுக்கு வாராத சில பாடல்கள் அப்பிரதிகளிற் காணப்பட்டன. அவை முதன் முதலாக இப்பதிப்பில் வெளியாகின்றன. வேறு சில பதிப்புக் களில் இத்தகைய பாடல்கள் புதிய பாடல்கள் என்று குறிக்கப் பட்டுள்ளன. சிலர் 'புதிய' என்ற சொல்லைக் கொண்டு அருணகிரிநாதர் வாக்கல்லவென்று விபரீதமாகக் கொள்ள நேரிடுமென்றஞ்சி இப்பதிப்பில் இப்பாடல்கள் இவையென்று தனியே குறிக்கப்படவில்லை. இப்பாடல்களுட் சில சென்னை அரசாங்கக் கையெழுத்துப் பிரதி நிலையத்து ஏட்டுப் பிரதிகளிற் கிடைத்தன. அவை இதுவரை அச்சில் வெளிவாராமையால் ஒரு பதிப்பாளரும் அவ்வேட்டுப் பிரதிகளைப் பயன்படுத்தவில்லை யென்பது புலனாம். இது மிகவும் வருந்தத்தக்கது. அரசாங்கத்தாரால் அரிதிற் சேகரிக்கப்பெற்றும், தமிழ்மக்கள் அனைவரும் பரிசோதித்துப் படியெடுக்கும் உரிமைக்குட்பட்டுமுள்ள இப் பிரதிகள் இனியேனும் நூல்களைத் திருத்தமாகப் பதிப்பிக்க விரும்பும் பெரியோர்களால் கையாளப்படுதல் வேண்டும்.

"நமது சமாசத்தோடு இணைக்கப்பெற்ற சென்னை இராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்தசன சபை கூட்டுப் பொறுப்புடன் பெரிதும் ஒத்துழைத்து இந்நூல் செம்மையாக அச்சிடப்படுதற்குத் துணைபுரிந்தும் இந்நூலை விரைவில் பரப்புவதில் இச்சபை பெரிதும் ஒத்துழைக்க வாக்களித் துள்ளதும் மிகவும் பாராட்டத்தக்கன.

"இப்பதிப்பு சமாசத்தின் அடக்க விலைச் சுத்தப் பதிப்பாகும். இதிலுள்ள பாடல்கள் பல பிரதிகளினின்றும் தேர்ந்தெடுக்கப்

பட்டன. ஊகத்தையோ அல்லது இன்ன பாடம் இருத்தல் நலம் என்ற விருப்பத்தையோ ஆதாரமாகக் கொண்டு எந்தப் பாடமும் இதிற் கொள்ளப்படவில்லை.

ம. பாலசுப்பிரமணியன்,
காரியதரிசி,
29-12--1935.        சைவசித்தாந்த மகாசமாசம்.

"திருப்புகழ்'' என்றுலே திரு வடக்குப்பட்டு திரு. த. சுப்பிரமணிய பிள்ளை, அவர்தம் மக்கள் திரு. சண்முகம் பிள்ளை, திரு. செங்கல்வராய பிள்ளை ஆகிய மூவரையுமே எல்லோரும் நினைப்பது வழக்கம். மேலும் மூவரும் பட்டம் பெற்று அரசில் உயர் அலுவலர்களாக இருந்தவர்கள். இவர்கள் மூவரும் வாழ்ந்துவந்த வீட்டைத் 'திருப்புகழ்த் தாயகம்' என்பார் வள்ளிமலைத் திருப்புகழ்ச் சுவாமி சச்சிதானந்தா அவர்கள். இம்மூவரும் தங்கள் வாழ்நாளைத் திருப்புகழ் ஏடு தேடுவதிலேயே கழித்தவர்கள். அரசு கையெழுத்துப் பிரதி நிலையத்துச் சுவடிகளை அவர்கள் பார்க்க வில்லை என்று சமாசத்தின் செயலர் எழுதியதுதான் வருந்தத் தக்கது. திரு. முதலியாரவர்கள் திருப்புகழை வெளியிடுமுன் சென்னையில் தமது வட்டத்திலேயே வாழ்ந்த தணிகை மணி வ சு. செங்கல்வராய பிள்ளையவர்களைக் கண்டு தமது கருத்தைத் தெரிவித்து விளக்கங் கேட்டுப் பின் முகவுரை எழுதியிருக்கலாம். அங்ஙனம் அவர்களைக் கண்டு கேட்ட தாகவே இல்லை. சமாசப் பதிப்பு வெளிவந்தபின் யான் தவத்திரு பிள்ளையவர்களைக் கண்டு கேட்டபோது தாம் அருணகிரிநாதர் வாக்கல்லவென்று ஒதுக்கிவிட்ட பாடல்களே மிகைப் பாடல்களாகச் சமாசப் பதிப்பிற் சேர்க்கப்பட்டுள்ளன வென்று சொன்னார்கள்.

மேலும் முன் பதிப்புக்களிலுள்ள முறை வைப்பினை அடியோடு மாற்றிச் சமாசப் பதிப்பின் பாட்டுக்கள் அகர வரிசையில் பதிப்பிக்கப்பெற்றிருப்பது ஓதுவோர்க்கு இடர்ப் பாடேயாகும். நிற்க.

அடக்க விலைச் சுத்தப் பதிப்புக்களாகச் சமாசவழி வெளி யிடப்பெற்ற பன்னிரு திருமுறைகள், பதினான்கு சாத்திரங் களின் விலையினையும், சமாச அடக்க விலைச் சுத்தப் பதிப்புத் திருப்புகழ் விலையினையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது ஒரு ரூபா விலை வைக்கவேண்டிய திருப்புகழுக்கு மூன்று ரூபா விலை வைத்திருப்பது எங்ஙனம் அடக்க விலையாகும் என்று எங்கணும்

பரவலாகப் பேசப்பட்டது. அதனைக் கேட்ட மதிப்புக்குரிய சமாசச் செயலர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் சித்தாந்தம் மலர் 9 இதழ் 6இல் அடியிற்கண்டவாறு அடக்க விலைக்கு விளக்கம் எழுதியுள்ளது வியப்புக்குரியது.

"பொதுவாக நூல்கள் அதிக விலைப் பதிப்பு, அடக்க விலைப் பதிப்பு, அசல் விலைப் பதிப்பு என மூவகைப்படும். அதிக விலைப் பதிப்புக்களை வெளியிடுவோர் ஆசிரியர்கட்கு ஊதியங் கொடுத்தல் வியாபாரிகட்கு மூன்றிலொரு பங்கு, சரிபாதி என்பன போன்ற விகிதப்படி தரகு கொடுத்தல் முதலிய வழிகளிலெல்லாம் செலவிட நேர்வதால் அதிக விலையை வாங்குவோர் தலையிற் சுமத்துவது வழக்கம். நமது சமாச வெளியீடுகளில் ஊதியம், தரகு முதலியன பெரும்பாலும் இன்மையால் மிகக் குறைந்த விலைக்கு அவை விற்கப்படும் நிலைமை ஏற்பட்டது. சமாச வெளியீடுகள் குறைந்த விலை பெற்ற அடக்க விலைப் பதிப்புக்களேயொழிய அசல் விலைப் பதிப்புக்களென்று எவராலும் எக்காலத்திலும் கூறப்பட வில்லை".

வழக்குரைஞரான திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியா ரவர்களிடம் நண்பர் சிலர் அடக்க விலைபற்றிக் கேட்டபோது 'அடக்க விலையென்றால் பிறர் விலைக்கு அடங்கிய விலையாகிய குறைந்த விலை' என்று விளக்கஞ் சொன்னார்களாம். இது அவர்கள் கொண்ட பொருள் என அமைதியுறுவோம்.

இத்தகைய குறைகள் எவையிருப்பினும் அவர்கள் சமாசத்தின் செயலாளராக வந்தபின் அவர்கள் செய்த தொண்டினைச் சைவ நன்மக்கள் ஒருபோதும் மறக்காமல் நன்றிக்கடன் செலுத்தக் கடமைப்பட்டவர்களாவர். மிகக் குறைந்த விலையில் அவர்கள் வெளியிட்ட பன்னிரு திருமுறை, மெய்கண்ட சாத்திரம் பதினான்கு, சிவஞான பாடியம், திருப்புகழ், சீவகசிந்தாமணி மூலம், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், சங்க இலக்கியம் ஆகியவை அவர்களைத் தமிழ் உள்ளளவும் நினைப்பூட்டும் என்பதில் ஐயமில்லை. பல ஆண்டுகள் உறங்கிக் கிடந்த சமாசத்திற்கு விழிப்பு நிலையுண் டாக்கி உலகறியச் செய்த பெருமை நம் முதலியாரவா கட்குண்டு என்று சொன்னால் அது மிகையாகாது.

நமது கழகம் திருக்குறள் மூலம், திருக்குறள் பொழிப் புரை, பன்னிரு திருமுறைத் திரட்டு, திருக்குறள் பரிமே லழகருரை, சிவஞான பாடியம் ஆகியவற்றை மிகவுங் குறைந்த விலைப் பதிப்புக்களாக வெளியிட்டமையும், அண்மைக் காலத்

தில் சில பதிப்பாளர்களால் புற்றீசல்போல் சில நூல்கள் மலிவுப் பதிப்புக்களாக வெளியிடப் பெற்றமையும் அறிதற் பாலன.

1905ஆம் ஆண்டில் சைவசித்தாந்த மகாசமாசத்தை மறைத்திரு மறைமலையடிகளார் தோற்றுவித்து அதன் முதல் நான்காண்டு விழாக்களை மிகவுஞ் சீரும் சிறப்புமாக நடத்திப் பின் தாமே அதினின்றும் விலகிக் கொண்டதும், அண்மையில் சேலத்தில் நடைபெற்ற சமாச ஆண்டு விழாவில் சமாசத்தின் பெயர் ''சைவசித்தாந்தப் பேரவை'' என மாற்றப் பெற்றதும் இங்கே நினைவுகூர்தற்குரியன.

இனித் திருப்புகழ் உரைப்பதிப்புக்களைப் பற்றிய குறிப்புக்களைக் காண்போம்.

1923 திருப்புகழ் முதற்பாகம் 100 பாடல்கள் மணி திருநாவுக்கரசு முதலியாரவர்கள் எழுதிய விருத்தியுரை. இது அமரம்பேடு இராசரத்தின முதலியாரால் தமது மலர்மகள் விலாசம் அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. உரையாசிரியர் திரு. முதலியாரவர்கள் மறைத்திரு மறைமலை யடிகளாரின் மாணவராவர். இவர்கள் எழுதிய முகவுரையில் ஒரு பகுதி படித்தற்பாலது.

''திருப்புகழ் முத்தமிழ்ப் புலமையும் வித்தகக் கல்வியும் வல்லவரும், மெய்ஞ்ஞான பூதிச் செல்வருமாகிய அருணகிரி நாதரால் அருளிச் செய்யப்பட்ட மிகச் சிறந்த நூலென்பது யாவருமறிந்ததொன்று. அது செந்தமிழ் இலக்கியச் செறிவும் இலக்கண அமைதியும் சாத்திரப் பொருள் அடக்கமும் பெற்றிருத்தலோடு வடமொழிக் கலப்பும் பெரிதும் உடையதாய் உளது. அன்றியும் சந்தப்பாட்டாதலின் அதன் இன்பம் நோக்கிச் சொற்கள் திரித்தும் பெய்துரைக்கப் பட்டுள்ளன. அல்லதூஉம் பாட்டுக்கள் பல பாட பேதங்களோடும், ஆங்காங்குச் சிதைந்து பொருள் புலப்படா நிலையிற் காணப்படுகின்றன. அதனுல் திருப்புகழுக்கு உரை வகுப்பது ஒரு கடினமான வேலையாகும். சில விடங்களில் யாருக்கும் பொருள் விளங்காத இடங்களும் இருக்கின்றன. அவை யெல்லாம் ஏடெழுதுவோரால் ஏற்பட்ட வழூஉக்கள் என்பது எனது துணிபு.''

1926 திருப்புகழ் 150 பாடல்கள் கொழும்பு திரு மு. திருவிளங்கம் எழுதிய உரை விளக்கப் பதிப்பு

சைவத்திருவாளர் மு. திருவிளங்கம் அவர்கள் வழக்குரைஞராவர். இவர்கள் சிவஞான சித்தியார் சுபக்கத்

துக்கும், சிவப்பிரகாசத்துக்கும், கந்தரலங்காரத்துக்கும் எழுதிய விளக்கவுரை அறிஞர்களால் பெரிதும் பாராட்டப் பெறுகின்றன.

திருப்புகழ் விருத்தியுரை—முதற் பாகம்

சுவாமிமலை, பழநி, திருச்செந்தூர் ஆகிய மூன்று படை வீடுகட்கு மட்டும் திரு பி. எசு. சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய விருத்தியுரையுடன் சாது அச்சுக்கூடத்தில் அச்சிடப் பெற்று அல்லயன்சு கம்பெனியாரால் வெளியிடப்பெற்றது. அச்சிடப்பெற்ற ஆண்டு குறிக்கப் பெருவிடினும் 1935 ஆக இருக்குமென்று தெரியவருகிறது. அடுத்த மூன்று படை வீடுகட்குமுள்ள விருத்தியுரை விரைவில் வெளியிடப்பெறும் என்ற குறிப்பின்படி வெளிவந்ததாக இல்லை.

திருப்புகழ் உரை (முழுவதும்)

(முருகவேள் பன்னிருதிருமுறை முதல் 5 தொகுதிகளில் வெளிவந்துள்ளது.)

சைவத் திருமுறை பன்னிரண்டினைப்போல முருகவேள் திருமுறை பன்னிரண்டு என வகுக்க வேண்டுமென்று தவத்திரு தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் கருதித் திருப் புகழை முதல் ஏழு திருமுறைகளாகவும், கந்தரலங்காரம், கந்தரந்தாதி ஆகியவற்றை 8ஆம் திருமுறையாகவும், திரு வகுப்பை 9ஆம் திருமுறையாகவும், கந்தரனுபூதியை 10ஆம் திருமுறையாகவும், வேல் விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம், திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, முருகனைப் பற்றிப் பலர் பாடிய பாடல்கள் முதலியவற்றை 11ஆம் திருமுறையாகவும் பாகுபடுத்தித் தாமே அவையனைத் துக்கும் உரை யெழுதித் தரத், திரு. மீனாட்சி கலியாண சுந்தரனார் அவற்றைத் தமது அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். 12ஆவது திருமுறையாக அருணகிரி நாதர், நக்கீரர் முதலிய சேய்த் தொண்டர்களைப் பற்றி வரகவி துறையூர் சொக்கலிங்கப் பிள்ளையவர்கள் பாடிய சேய்த் தொண்டர் புராணம் தணிகைமணியவர்களால் வெளியிடப் பெற்றது அரும்பெருஞ் செயலாகும்.

திருப்புகழ் விருத்தியுரை

இளமை தொட்டே திருப்புகழையோதித் திருமுருக வழி பாட்டிலே திளைத்தவராய், நினைவாற்றல் மிக்கவராய்,

நாவன்மையுடையவராய்த் தமிழ் மக்கள்வாழ் இடங்கட்கெல்லாஞ் சென்று சொன்மாரி பெய்து சமயத்தை நாளும் பரப்பி வரும் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் திருப்புகழ் முதல் 6 படை வீடுகட்கும் பொழிப்புரை, பதவுரை, விருத்தியுரை என்று தலைப்பிட்டு மிகவும் விரிவாக மேற்கோள்களுடன் எழுதிவரும் உரை 6 புத்தகங்களாக வெளியிடப் பெற்றிருக்கின்றன. ஏனைய தலங்கட்குரிய பாடல்கட்கும், பொதுப் பாடல்கட்கும் எழுதப்பெறும் விரிவுரை மேலும் 6 புத்தகங்களாக வெளியிடப் பெறும் என்று தெரியவருகிறது. இஃதோர் அரும்பெருந் திருவருட் செயலாகும்.

அருணகிரிநாதர் 16,000 பாடல்கள் பாடியுள்ளனரா என்பதுபற்றிச் சிலர் ஐயுறுகின்றனர். திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் எத்தனையோ ஆயிரம் பாடல்கள் பாடியுள்ளவற்றில் இப்போது கிடைத்திருப்பன ஒரு சில ஆயிரம் ஆகும். குமரகுருதாச சுவாமி என்றும் திருப்புகழ்ச் சுவாமி என்றும் அழைக்கப்பெற்ற அருட்டிரு தண்டபாணி சுவாமிகள் திருவாமாத்தூரில் 1898 ஆம் ஆண்டில் சமாதி கூடினர். அவர்கள் தம் கையாலேயே ஓலைச் சுவடிகளில் எழுதிய. தாம் பாடிய சந்தப் பாடல்கள் உட்பட 50,000 பாடல்கள் இருக்கும். அச்சுவடிகள் அனைத்தும் பாதுகாப்பாகத் திருவாமாத்தூர் கௌமார மடத்திலே அடுக்கி வைக்கப்பெற்றிருக்கின்றன. அவர்கள் பாடல்களிலே இடைச் செருகலுக்கு இடமே இருக்காது என்பது உய்த்துணரற்பாலது.

இப்போது துறவு பூண்டு சாதுராம் என்னும் அருட்கவி சேதுராமன் அவர்கள் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் 'திருப்புகழ் நிலயம்' என்ற இல்லத்திலே கோயில் கொண்டுள்ள திருத்தணிகை முருகனைப் பற்றிப் பலகால் சென்று பாடிய சந்தப் பாடல்கள் ஆயிரத்துக்கு மேலிருக்கும். அவற்றிலிருந்து 233 பாடல்கள் மட்டும் 1970 ஆகஃச்டுத் திங்களில் தவத்திரு தணிகைமணி யவர்களால் அச்சிடப்பட்டுத் 'திருத்தணிகைத் திருவீதிகை அருட்புகழ்' என்னும் பெயரால் ஒரு நூல் வெளியிடப் பெற்றுள்ளது. மேலும் அருட்கவி சேதுராமன் பலகோயில்கட்குஞ் சென்று திருமுருகனைப் பற்றிப் பாடிய சந்தப்பாக்கள் ஆயிரத்துக்கு மேலிருப்பதோடு பிள்ளையார், சிவபெருமான், உமையம்மை முதலிய தெய்வங்களைப் பற்றியும் அடியார்களைப் பற்றியும் பாடிய பாடல்கள் சில ஆயிரமிருக்கும். இங்ஙன மிருக்கையில் அருணகிரிநாதர் 16,000 பாடல்கள் பாடியிருப்பார் என்பதில் எட்டுணையும் ஐயுறுதற்கில்லை என்பது தெளிவு.

கிடைக்கப் பெற்ற திருப்புகழ்ப் பாடல்களிற் சிலவற்றை அவை அருணகிரிநாதர் வாக்கல்லவென்று முந்திய பதிப்பாளர் தள்ளி விட்டது ஏன் என்று கேட்கப்படுகின்றது? திருமுருகன் திருவடி சிந்தையராய் அருணகிரிநாதர்மீது அன்பு மீக்கூர்ந்தவராய்த் திருப்புகழ் ஏடு தேடுவதிலேயே தம் வாழ்நாளைச் செலவிட்டுத் திருப்புகழ்ப் பாடல்களை ஆய்ந்து வந்த அருளாளர்க்கு இவை அருணகிரிநாதர் திருவாக்கில் எழுந்தவை—இவை அவ்வாறு எழாமல் இடைச் செருகலாய்ப் புகுந்தவை என்று விளங்குவது இயல்பு எனக் கொள்ளுதலே பொருந்தும். எதுபோல வெனின், தாம் மேய்த்து வரும் ஆடுகள் பிறிதொரு மேய்ப்பானின் ஆட்டு மந்தையுடன் கலந்து விடினும் தம்மவற்றைமட்டுங் கண்டு பிரித்து விடுவது வழக்கமாயிருததலாலும், பால் மாடுகள் பல இருப்பினும் குழக்கன்று தன் தாய் நாடிச் செல்லுதலைக் காணுதலாலும் ஆம்.

இனிக் கல்லாடர் அருளிய கல்லாடம் என்னுஞ் செந்தமிழ் நூற்பதிப்புக்களைப் பற்றிக் காண்போம்.

**1868 கல்லாடம் மூல மட்டும்**

இது திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களால் பல சுவடிகளைக்கொண்டு பரிசோதிக்கப் பட்டுப் பூவிருந்தவல்லி கன்னியப்ப முதலியாராலும் புங்கத்தூர் கந்தசாமி முதலியாராலும் சென்னை அத்தினியம் டென்றியூஸ் பிரான்சு அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றது.

**1872 கல்லாடம் உரை**

இதில் 37 அகவற் பாடல்களுக்கு இலக்கணக் கொத்து ஆசிரியர் சுவாமிநாத தேசிகர்க்கு முத்தமிழாசிரியராகிய மயிலேறும்பெருமாள் பிள்ளை உரை எழுதியுள்ளார். மற்றைய 62 அகவல்களுக்குப் புதுவை க. சுப்பராய முதலியார் உரை வரைந்தனர். புதுவை அருணசல குருக்களது லட்சுமி விலாச அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. திரு. பு. க. சுப்பராய முதலியார் இந் நூலுக்கு எழுதிய முகவுரையினின்றும் அறிதற்பாலன.

"முத்தமிழாசிரியர் மயிலேறும்பெருமாள் பிள்ளை முதல் 37 அகவல்கட்கு உரை எழுதியுள்ளார். எஞ்சியவற்றிற்கு உரை செய்தால் யாவர்க்கும் உபயோகமாகு மென்று வேண்டுகோள்

விடுத்துக் கடவுளையும் ஆசிரியரையும் வணக்கஞ் செய்து உரையிடப் புகுந்ததில் என்மட்டில் அகப்பட்ட பிரதிகள்தோறும் கண்ட பாடபேதங்கட்கு ஓர் வரையறை யில்லை. அன்றியும் சில பிரதிகளில் கடவுள் வணக்கத்துடன் நூறு அகவற்பாக்களும், சிலவற்றில் அவற்றுடன் நூற்றிரண்டுமாக இருந்தன. எமக்குக் கிடைத்த பிரதிகள் பலவற்றுள்ளும் ஒன்று மிகப் பழமையுடையதாயும் திருவாவடு துறை யாதீனத்திலிருந்து கிடைக்கப் பெற்றதாயுமுள்ள பிரதி யொன்றுளது. அது தமிழ்த் தலைமைப் புலவர் தாண்டவராய முதலியாராலும் காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியாராலும் பரிசோதிக்கப்பட்டுள்ளது. எஞ்சிய பாடல்கட்கு உரை எழுதிப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் முன்னிலையில் பாரவையிட்டு அச்சிற்பதித்தேன். நடனம், ரத்தினப் பரீட்சை (நவமணி) இசை ஆகிய மூன்று பொருள்களைப்பற்றிய இறுதிப் பாடல்களுக்குப் பொருள் நன்கு புலப்படாமையால் அவற்றை உரை இல்லாமல் பதிப்பிக்க வேண்டியதாயிற்று. இந்நூல் கையொப்பங்கள் வாங்கி அப்பொருளுதவி கொண்டே அச்சிடப் பட்டது.

"எம்மினும் மிக்கோராகிய பெரியர் இந்நாட்டினும் தென்னாட்டினும் பலருளராகலின் என்பால் அன்புந் தயையுமுடையராய் அவற்றின் பொருளைத் தெரிவிப்பாராயின் அவற்றை அடுத்த பதிப்புக்கு நன்றியறிதலுடன் பெற்றுக்கொள்ள எதிர்பாராநிற்கின்றேன்''.

**1911 கல்லாடம் உரை**

இது மயிலேறும்பெருமாள் பிள்ளை, புதுவை க. சுப்பராய முதலியார் ஆகியோர் எழுதிய உரையோடு அதனை விளக்கி மகாவித்துவான் காஞ்சி இராமானந்த யோகிகள் எழுதிய அகலவுரையுடையது. பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் எழுதிய ஆராய்ச்சி முகவுரை இந்நூலுக்கு அணி செய்கிறது. இதிலும் கடைசி மூன்று அகவல்கட்கு உரை கிடையாது. இது சென்னை ரிப்பன் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றது.

**1963 கல்லாடம் பெருமழைப்புலவர் உரை (கழகப் பதிப்பு)**

உரை காணப்பெறாத சூளாமணி, பெருங்கதை ஆகிய காப்பியங்கட்கு உரை எழுதிய பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனாரவர்களைக் கல்லாடத்துக்கு விளக்கவுரை எழுதித்தரும்படி யான் வேண்டினேன். அவர்கள் அதற்

கிசைந்து உரை எழுதுவாராயினர். இதன்கண் உரை எழுதப் பெருத நவமணி, நடனம், இசை பற்றிய மூன்று பாடல்கட்கு உரை எழுதுவதற்கு முன் சென்னையிலுள்ள நடனக் கலை வல்லுநரையும், இசைக்கலை வல்லுநரையும் அணுகி உரை விளக்கங் கேட்டுத் தெளியப் பெருமழைப் புலவர் அவர்களோடு யானுஞ் சென்றேன். அக்கலை வல்லுநர்கட்கு இலக்கியப் புலமை யில்லாமையால் அவர்கள்வழித் தெளிவுபெறக் கூடவில்லை. சிலப்பதிகாரம், திருவிளையாடற் புராணம், விபுலானந்த அடிகள் யாழ்நூல், வரகுணபாண்டியனர் பாணர் கைவழி, நவமணி முதலிய நூல்களை நன்கு ஆய்ந்து தெளிவுபெற்று அறிஞர் பெருமக்கள் போற்றும் வகையில் விளக்கவுரை எழுதி யுள்ளார்கள். 'கல்லாடங் கற்றவரோடு மல்லாடாதே', 'கல்லாடங் கற்றவரோடு சொல்லாடாதே' என்று வழங்கிவரும் பழமொழிகட்கு இலக்கணமான கல்லாடம் முழுமைக்கும் உரை எழுதி வெளியிடும் பேறு கழகத்துக்குக் கிடைத்தது திருவருட் செயலே.

அடுத்த பரலிற் கம்பராமாயணப் பதிப்புக்களைப்பற்றிய குறிப்புக்களைக் காண்போம்.

வ. சுப்பையா.

---

## நூல்கள் தரும் நற்பயன்

ஒரு நூல் நிலையத்தில் உனக்குக் கிடைப்பது என்ன என்பதை நினைத்துப்பார்! ஆயிரக்கணக்கான ஆண்டுக ளிடையே உலகில் பல நாடுகளிலும் வாழ்ந்தவருள் தலைசிறந்த அறிஞர், சொற்செல்வர், கலைப்பண்பாளர் தம் கல்வியின் பயனை. அறிவின் பயனை தலைசிறந்த கருத்துக்களைத் தலை சிறந்த முறையிலும், ஒழுங்கிலும் தொகுத்த தொகுப்புக்களின் சூழல், உன்னுடன் உறவாடக் காத்திருக்கிறது......தம் உயிர்த் தோழனுக்குக்கூட அவர்கள் முற்றிலும் மனந்திறந்து உரைத் திருக்க மாட்டாத உயர் அருங் கருத்துக்கள் தெள்ளத்தெளிய வரையப்பட்டு, ஏதோ ஓர் ஊழியில் வரும் உன்னிடம் தரப் பட்டுள்ளன!

எமெர்ஸன்

# சங்க இலக்கியத்தில் கூகையும் குராலும், குடிஞையும், ஊமனும் ஆண்டலையும்

(The barn owl, The Collared scops owl, Indian great horned owl, Brown fish owl, Hawk owl.)

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

சங்க இலக்கியத்தில் ஆந்தையினப் பறவைகளாக ஐந்து வகைப் பறவைகள் கூறப்பட்டுள்ளன. அவை கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை என்பவைகளாகும். ஆந்தை என்ற பெயரை இந்த இனத்திற்கே பொதுப் பெயராக இங்குப் பயன்படுத்தி யிருக்கிறேன். ஆந்தை யென்ற பெயர் ஐந்திணை எழுபது என்ற நூலில்தான் முதலில் பயில்கின்றது. முற்பட்ட சங்க நூல்களான அகநானூறு, புறநானூறு முதலிய சங்க நூல்களில் ஆந்தை என்ற பெயர் காணப் படாதது வியப்பைத் தருகின்றது. பிற்காலத்தில் ஆந்தை யென்ற பெயரையே உரையாசிரியர்கள் பெரும்பாலும் பயன் படுத்தி யிருக்கிறார்கள். ஆதலின் இப் பெயரை இப் பறவை வகைகளின் இனப் பெயராகக் கொள்வது நல்லது.

**கூகை :**

கூகை இடிந்த கட்டிடங்களிலும், நெற்களஞ்சியங் களிலும் காணப்படும் ஒருவகை ஆந்தையாகும். இது மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறத்தோடு காணப்படும். இதற்குப் பெரிய வட்டவடிவான தலையும் குரங்கு முகம் போன்ற வெள்ளையான தட்டையான முகமும் உண்டு. இது இரவில் எலி முதலியவைகளை வேட்டையாடும். இதை மனிதர்கள் வாழும் சூழ்நிலையில் பெரும்பாலும் காண முடியும். இதைப் பற்றிச் சங்க நூல்களில் சில செய்திகள் காணப்படு கின்றன.

"திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்
இல்எலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் குயாமத் தழிதகக் குழறும்
வளைக்கட் சேவல் வாளாது மடியின்" —அகம் ; 122.

"......................... ... ...வெருவர
மன்ற மராஅத்த கூகை குழறினும்" —அகம் 158

"குன்றக் கூகை குழறினு முன்றிற்" —குறுந்தொகை 153

"எம்மூர் வாயில் உண்டுறைத் தடைஇய
கடவுள் முதுமரத்த உடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்
வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை
மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்" —நற்றிணை 83

"ஞாயிறு கோடா ஒண்பக லமையத்துக்
கவலை வெண்ணரி கூஉமுறை பயிற்றி
கழல்கட் கூகை குழறுகுரற் பாணிக்"
—பதிற்றுப்பத்து 22 : 34 - 36.

"ஒழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மரந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை"
—பதிற்றுப்பத்து 44 : 17 - 19.

"அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவும்"
—பட்டினப்பாலை - 258-

"உணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நண்பகற் குழறவும்"
—பட்டினப்பாலை 267 - 268.

"பல்லா தழீஇய கல்லா வல்வில்
உழைக்குரற் கூகை யழைப்ப வாட்டி" —புறம் 391.

"களரி பரந்து கள்ளி போகிப்
பகலுங் கூவும் கூகையொடு பிறழ்பல்" —புறம் 356-

"பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல" —புறம் 357

"மாடத் தகத்தி லாடுவினைக் காவினுட்
கொம்பர் மீமிசைக் கூகை வந்துலாஅய்"
—பெருங்கதை ௨ 3 : 14 - 151.

"வெருவக் குழறிய விழிகட் கூகைக்
கடுங்குர லறியாள் கதுமென நடுங்கினள்"
—பெருங்கதை 22 - 150 - 152.

''சிறுவெள் ளென்பி னெடுவெண் களரின்
வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலுங் கூவு மகலு ளாங்கட்'' —புறம் 362.

''நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும்
கூகைக் கோழி யாணுத்
தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே'' —புறம் 364.

''கூகைக் கோழி வாகைப் பறந்தலை'' —குறுந்தொகை 393.

''வாகை வனமாலை சூடி யரசுறையும்
ஓகை யுயர்மாடத் துள்ளிருந்து கூகை
படுபேய்க்கு வாட்டயரும் பண்பிற்றே''
—புறத்திரட்டு - முத்தொள்ளாயிரம் 1281.

கூகை நெல் முதலியன போட்டு சேமிக்கும் களஞ்சியங்களில் காணப்படும் என்று பறவை நூலார் கூறுவர். இதன் ஆங்கிலப் பெயரான Barn owl என்பது களஞ்சிய ஆந்தை என்ற பொருளில் வழங்குவதைக் காணலாம். 'கரிகுதிர்ப் பள்ளியில்' காணப்பட்டதாக மதுரைக் காஞ்சியும் 'உணவில் வறுங் கூட்டகத்து' இருந்ததாகப் பட்டினப்பாலையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். உயர்ந்த மாடக் கட்டடத்தில் கூகை யிருந்ததை முத்தொள்ளாயிரமும் பெருங் கதையும் கூறுவதைக் காணலாம். மற்றும் மன்றத்தின் மரத்திலும், வாகை மரத்திலும், களர் நிலத்தில் இருந்த கள்ளி மரத்திலும் இருந்து கூகை கத்தியதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. முதிய மரப்பொந்தில் இருந்து குரலிடும் கூகையைப்பற்றி புறநானூறு கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். முதிய மரங்களின் பொந்துகளில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் கூகையைப்பற்றிப் பறவை நூலார் எழுதியுள்ளனர். (Eggs deposited in holes or niches in ruins of buildings occupied or deserted and in hollows in ancient trees, the same hole being used in successive years and if left undisturbed tend to become traditional.) முதிய மரங்களில் ஆண்டாண்டுதோறும் ஒரே பொந்தில் தங்கி முட்டையிடும் கூகையைப்பற்றிப் பறவை நூலார் கூறியதைக் கவனிக்க வேண்டும். இதை நன்கு உணர்ந்தே அகநானூறு (260), நற்றிணை (83) பாடல்கள் குறிப்பிட்டுள்ளதைக் காணும்போது வியப்படைகிறோம்.

''யாங்கா குவன்கொல் தானே நீங்காது
முதுமரத்து உரையும் முரவுவாய் முதுபுள்
கதுமெனக் குழறுங் கழுதுவழங் கரைநாள்'' —அகம் - 260.

முதுமரத்தில் (Ancient tree) முதுபுள் (Ancient bird) திடீரென்று குழறிய நள்ளிரவு என்று அகநானூறு கூறுவதைக் கவனிக்க வேண்டும். பறவை நூலார் கண்டு கூறியதோடு எவ்வளவு பொருத்தமாகக் கூகையைப்பற்றிச் சங்கப் புலவர் கூறியுள்ளார். கூகை இரவுக் காலத்தில் வெளியே வருமென்று கூறுவர். சங்க நூல்களிலும் இரவிலும், பேய்கள் நடமாடும் நள்ளிரவிலும் கூகைகள் கத்துவதாகக் கூறியுள்ளனர். ஆதலால் இதைப் பகற் குருடு என்பர். காக்கைகளும் மனிதரும் தொந்தரவு செய்யாவிட்டால் கூகை பகலிலும் வெளியே வருமென்று பறவை நூலார் கூறுவர். பதிற்றுப்பத்தில் ஞாயிறு மறையாத நண்பகலில் கூகை குழறினதாகக் கூறியிருப்பதைக் காணலாம். கூகையின் உணவு பெரும்பாலும் வீட்டு எலிகள் என்று பறவை நூலார் கூறுவர். 'இல் எலி வல்சி'யுடைய கூகையைப்பற்றி அகநானூறு கூறியுள்ளது. வெள்ளை எலியையும் தின்னு மென்பதை நற்றிணைப் பாடல் (83) குறிப்பிட்டுள்ளது. கூகை ஊன் உணவை விரும்பி உண்ணும் என்று சங்கப் புலவர்கள் கருதினர். ஆட்டு இறைச்சியை நெய்யில் புழுக்கிக் கூகைக்கு வெள்ளை எலியின் சூட்டிறைச்சியோடு தருவதாக ஒரு புலவர் பாடியுள்ளார். கொழுத்த பச்சை இறைச்சித் துண்டை ஓரிடத்தில் பதுக்கி வைத்துப் பின்னர் வைத்த இடம் தெரியாது தேடிக் கவலையுடன் கத்திய கூகையைப்பற்றிப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது. கூகை இரவில் கத்துவது மிகுந்த பயத்தைத் தரும். கூகைக்கு வெவ்வேறு வகையான குரல்கள் உண்டு. நீண்ட அழுகுரல் போன்ற ஓசையும், குழறுவது போன்ற ஓசையும், குறட்டை விடுவது போன்ற ஓசையும் செய்யு மென்று பறவை நூலார் கூறுவர். அலகுகளைத் தேய்த்து முரமுரவென்று ஓர் ஓசை செய்யும் வழக்கமு முண்டு. சங்க நூல்களில் கூகை செய்யும் ஓசைகளையும் ஒலிகளையும் பல பாடல்களில் பாடியுள்ளனர். குழறும் ஓசையை அகநானூறு, குறுந்தொகை, பட்டினப் பாலை, பதிற்றுப்பத்து கூறுகின்றன. குழறுகுரல் பாணி என்று பதிற்றுப்பத்து கூறியுள்ளது. பலவகை ஓசைகளிடுவதால் வேறுபடு குரல் என்று புறநானூறு பொருத்தமாகக் கூறியுள்ளது. (A variety of discordant long-drawn shrieks and chuckles and weird snoring and hissing notes; A castanet bill snapping when hungry) பறவை நூலார் கூறியது

போலவே சங்க நூல்கள் கூகையின் ஓசைகளை வர்ணித்திருப்ப தைக் கவனிக்க வேண்டும். முரமுர வென்று ஓசையிடு வதாலும் 'முரவுவாய் முதுபுள்' என்று அழைக்கப்பட்டது.

கூகையின் தலையைத் 'துய்த்தலை' என்று சங்க நூல்கள் கூறும். துய்போன்ற மெல்லிய தூவிகள் இதன் தலையில் இருப்பதைக் கண்டே கூறினர். கூகைக்கு வளைந்த வாயும் கூரிய நகங்களும் இருப்பதாகச் சங்க நூல்களில் கூறப்பட்டிருப்பதும் உண்மையே. நற்றிணை 83ஆம் பாட்டில் முதுமரத்தில் உடனுறைந்து பழகிய தேயாத வளைந்த வாயை யுடைய தெண்-கண்ணையுடைய கூருகிரையுடைய வாய்ப்பறை ஓயாத கூகை என்று வர்ணித்துள்ளது கூகையைப்பற்றிய அழகிய விளக்கமாகும். கூகையின் கண்களைத் 'தெண்கண்' என்றும் 'கழல்கண்' என்றும் கூறியதைக் கவனிக்க வேண்டும். வளைக்கண் என்று அகநானூறு 122 கூறுகின்றது. தெண் கண் என்பது தெளிந்தகண் என்று பொருள் பெறும். கண்கள் பெரிதாகத் தெளிவாகப் பார்க்கக் கூடிய சக்தியுடைய தென்று பறவை நூலார் கூறுவர். வளைக்கண் என்றது கூகையின் கண்ணைச்சுற்றி வட்ட வளையமாக இறகுகள் கதிர் போல் விரிந்திருக்கும் காரணத்தால் என்று தெரிகின்றது. இந்த வட்ட வளையத்துள் கண் தெரிவதால் கூகையின்கண் பெரிதாகத் தெரிகின்றது. வளைக்கண் என்று கூறப்பட்டது இதன் காரணமாகவே யாகும். கழல்கண் என்று கூறியது கூகையின்கண் கழற்சிக்காய் போல இருப்பதால் என்று கருத வேண்டும். கழங்கை, கழற்சிக்காயை விலங்குகளின் கண் ணிற்கு ஒப்பிட்டுச் சங்க நூல்கள் கூறுவதுண்டு. வளைந்த அலகும் கூரிய விரல்களும் இருப்பதைப் பறவை நூலாரும் குறிப்பிட்டுள்ளனர்.

கூகையைச் சாவுக் குருவி என்று ஈழ நாட்டிலும் தமிழ் நாட்டிலும் அழைப்பதுண்டு. புறநானூற்றிலும் மணிமேகலை யிலும கூகை செத்துப் போகிறவர்களைக் கூப்பிடுவதாகக் கூறியுள்ளதைக் காணலாம். சாவோரை அழைப்பதாகக் கருதியதால் சாக்குருவி என்று இன்றும் கூகையை நாட்டு மக்கள் அழைக்கின்றனர்.

"சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்"

—மணிமேகலை - சக்கரவாளக்கோட்ட முரைத்தகாதை 75.

"பொத்தவரையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவிபெனச் செத்தோர்ப் பயிருங்
கள்ளியம் பறந்தலை"

—புறம் 240.

கூகை செத்தோரைக் கூப்பிடும் சுள்ளி நிறைந்த சுடுகாடு என்று புறநானூறு கூறியுள்ளது. குறுந்தொகை 393ஆம் பாடலில் கூகைக் கோழியென்று கூகையை ஒரு புலவர் அழைத்துள்ளார். ஆதலின் அப் புலவருக்குக் 'கூகைக்கோழி யார்' என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், அப் புலவருக்குக் கூகைக் கோழியார் என்பது காரணப் பெயராக அமைந்தது என்று கூறியது பொருத்தமாகத் தோன்றவில்லை. இயற்பெயர் மறைந்துபோனதால் கூகைக் கோழியார் என்று இவரை அழைத்திருக்கலாம். ஏனென்றால் புறநானூற்றில் (364) பரணரும் 'கூகைக்கோழி' என்று அழைத்திருக்கின்றார். காரணப்பெயராக இருந்திருந்தால் பரணரையும் கூகைக்கோழி யார் என்று பெயரிட்டு அழைக்க வேண்டும். கூகைக்கோழி என்ற பெயர் சங்ககாலத்தில் மக்களிடையே வழங்கி யிருக்க வேண்டும். இன்றும் ஒரு வகை ஆந்தையைக் (Mottled owl) 'காலங்கோழி' என்று திருவாங்கூர் கொச்சிப்பகுதிகளில் கிராம மக்கள் அழைக்கின்றனர். ஆதலின் கூகையுடன் கோழிப் பெயர் சேர்த்துச் சங்கநூல்களில் கூறியது அக்கால வழக்கி னடிப்படையாகவே இருக்க வேண்டும். ஒருவகை ஆந்தைக்குக் கோழிப் பெயர் கொடுத்து அழைத்த மலையாள வழக்கு சங்க மரபுடன் இன்றும் காணப்படுவது வியப்பைத் தருகின்றது. மலையாளத்தில் இந்த வகை ஆந்தையைச் சாவுதரும் எமதூதன் என்று பெண்கள் கருதுவர். இதைச் செகுத்தான் என்றும் கூறுவர். செகுத்தான் என்ற சொல் காலனை, எமனைக் குறிக்கும். காலனாகிய கோழி என்பதே காலங் கோழி என்ற மலையாளப் பெயர்க்குப் பொருள். இப் பறவை கூவுங்கால் பெண்கள் புடைவை முந்தாணியை கை விரலில் சுருட்டி 'நாராயணா, நாராயணா' என்று கூப்பிட்டுச் சாவைத் தடுக்க முயல்வர். மலையாளத்தில் அழைக்கும் காலங் கோழி சங்க நூல்களில் கூறப்படும் கூகைக் கோழியாகவும் இருக்கலாம். ஏனென்றால் கேரளத்தில் கூகைக்கும் இத் தகைய பயமுண்டு. சங்க நூல்களில் கூறிய செத்தோர் பயிரும் கூகையையே மலையாளத்தில் காலன் கோழி என்று அழைத்திருக்கலாம். கூகையின் ஆணைச் சேவல் என்பதும் சங்க கால வழக்கமாகும். கூகைக் கோழி குரலிட்ட இடமாகச் சங்க நூல்கள் கூறுமிடம் சுடுகாடே என்பதையும் கவனிக்க வேண்டும். அதனால் அக் கூகைக் கோழியே காலன் கோழியாகலாம். கூகையைச் சாக்குருவி என்று தமிழ் நாட்டில் அழைப்பதையும் இது சார்பாக எண்ணிப் பார்க்க வேண்டும்.

கூகையை மலையாளத்தில் பொதுவாக வெள்ளிமூங்கா என்றழைப்பர். வெள்ளையான மூங்கன் என்பது இதன் பொருள். ஒருவகை ஆந்தைக்கு ஊமன் என்றொரு பெயர் தமிழில் உண்டு. மூங்கன் என்ற பெயர் ஊமன் என்ற பொருளை யுடையதாகும். வெள்ளையான முகத்தையுடையதாகையால் வெள்ளிமூங்கா என்றழைக்கப்பட்டது. கூகையைக் கருநிறக் காக்கைக்கு முரணாக 'வெண்ணிறக் கூகை' என்று கல்லாடம் குறிப்பாகக் கூறியுள்ளதைக் கவனிக்கலாம். மலையாளத்தில் இதைப் பத்தாயப்பட்சி என்றும் கூறுவர். களஞ்சியத்தில் காணப்படுவதைக் குறித்தே இப்படிக் கூறுவர். கூகை என்ற பெயரே இப்பறவை 'கூகூ' என்று கத்துவதால் வந்ததென்று தெரிகின்றது. இப்பறவையை வடநாட்டில் மராத்தி மொழியில் 'கூவாட்' என்றழைப்பதும், மத்திய பிரதேசத்தில் 'கூகூ' என்ற பெயரால் அழைப்பதும் கூகை என்ற தமிழ்ப் பெயர் போன்றதே. தெலுங்கு மொழியில் 'சாவோ பிட்டா' என்றழைக்கின்றனர். பிட்டா என்பது பெட்டை என்பதன் மறு உருவமாகும். சாவுக்கோழி என்பதே தெலுங்குப் பெயரின் பொருள். இப்பெயர் காலன்கோழி என்ற மலையாளப் பெயர் போலச் சாவுக்குருவி என்ற தமிழ்ப் பெயர்போலவும் உள்ளதைக் கவனிக்கவேண்டும். கூகையின் பெட்டையே, கோழியே சாவைத் தரும்படி குரலிடுவதாகச் சங்கநூல்களிலும் பிற்காலத்தில் நம்பிக்கை இருந்திருக்கலாம். கூகையை ஆங்கிலத்தில் Indian Barn owl என்றும் பறவை. நூலில் Tyto alba என்றும் அழைப்பர்.

**குரால்**: சங்கநூல்களில் சொல்லப்பட்டுள்ள ஆந்தை வகைகளுள் குரால் என்பதும் ஒன்றாகும். கூகையும் குராலும் ஒன்றேயென்றும் குரால் என்பது கூகையின் பெண் என்றும் சில உரையாசிரியர்கள் கொண்டனர். இது தவறு என்று தெரிகின்றது. குரால் என்பது கூகையின் வேறான ஆந்தை யினப் பறவை என்று தெரிகின்றது.

"புலாஅற் கையற் பூசா வாயற்
ஒராஅ உருட்டுங் குடுமிக் குராலொடு
மராஅஞ் சிறூர் மருங்கில் தூங்கும்" —அகம். 265.

"பராஅரை வேம்பின் படுசினை யிருந்த
குராஅல் கூகையும் இராஅ இசைக்கும்" —நற்றிணை. 218.

"மணன்மலி மூதூர் அகல்நெடுந் தெருவில்
கூகைச் சேவல் குராலோடு ஏறி

ஆரிருள் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்
அணங்குகால் கிளரும் பேங்கிருள் நடுநாள்''

—நற்றிணை. 319.

''வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை''

—பதிற்றுப்பத்து. 44-18-19.

''நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்
குடுமிக் கூகை குராலொடு முரல'' —மதுரைக்காஞ்சி. 170.

''அஞ்சுவரு குராஅற் குரலுந் தூற்றும்'' —புறம். 280.

குரால் என்ற வகை ஆந்தை யினப்பறவை சிறிய ஊரின் அருகில் மரத்தில் இருக்கும் என்றும் பெரிய அடிமரத்தை யுடைய வேம்பின் கொம்பில் இருக்குமென்றும், அகன்ற நெடிய தெருவில் சதுக்கத்துள்ளோர் பயப்படும்படி கூகை யோடு சேர்ந்து குழறும் என்றும் சங்க நூல்கள் கூறியிருப் பதைக் கவனிக்கவேண்டும். குராலுக்குக் குடுமி இருப்பதாக அகநானூறு (265) கூறியுள்ளது. குரால் என்ற சொல் கபில நிறத்தைக் குறித்துச் சங்கநூல்களில் வழங்கினதைக் காணலாம். குரால் என்ற பெயரே கபிலநிறப் பசுவைக் குறித்துப் புறநானூறு 325ஆம் பாடலில் வழங்கியுள்ளது. கலித்தொகை 104-105ஆம் பாடல்களிலும் குறுந்தொகை 224ஆம் பாடலிலும் மணிமேகலையிலும் குரால் ஆன் என்ற பெயர் கபிலநிறப் பசுவைக் குறித்து வழங்கியுள்ளது. ஆதலின் குரால் என்ற ஆந்தை வகையும் கபிலநிற அடிப்படை யாகவே பெயர் பெற்றிருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை. கபிலநிறமும், குடுமியும் உடைய ஆந்தை வகை, ஊரருகில் உள்ள மரச்சூழலில் காணப்படும் ஆந்தை வகை எதுவென்று ஆராயுங்கால் அது பறவை நூலார் கூறும் The Collared Scops owl என்பதேயாகும். இந்த ஆந்தைதான் மக்கள் வாழும் இடங்களருகில் கபிலநிறத்துடன் (Rufous brown) காணப்படும் ஆந்தை வகையாகும். 'குராஅல் கூகையும்,' 'கூகைச்சேவல் குராலோடு ஏறி' என்று வரும் நற்றிணை வரிகளுக்கு உரை கூறும்போது குராற் கூகை இருபெய ரொட்டுப் பெயர் என்று பொருள் கூறியுள்ளனர். இந்த இடங்களில் குராலும் கூகையும் என்று இருபறவைகளாகக் கொள்வதே பொருத்தமாகும். குராலும் கூகையும் மக்கள் வாழுமிடங்களினருகில் நெருங்கிக் காணப்படுவது இயற்கையில் கண்டறிந்ததேயாகும். குரால் என்பதைக் கூகையின் பெண் என்று கொண்டால் கூகைக்கோழி என்றும் கூகைச்சேவல்

என்றும் சங்க நூல்கள் கூறவேண்டியதில்லை. கூகையும் குராலும் குரலிடுவதாகக் கூறுவது சங்க நூல் வழக்கு. மணிமேகலையில் கூகையின் குரலும் குராலின் குரலும் ஆண்டலையின் குரலும் வெவ்வேருகக் கூறப்பட்டிருப்பதால் கூகையும் குராலும் ஆண்டலையும் வெவ்வேறு ஆந்தை யினப் பறவைகள் என்பது தெளிவாகும். குராலிற்குத் தலையில் இரண்டு சிறு கொண்டைகள் உண்டு. ஆனல், கூகைக்கு இத்தகைய குடுமிகள் கிடையா. இந்தக் குடுமிகள் (Horns) குராலிற்கு இருப்பதைப் பறவை நூலாரும் குறிப்பிட்டுள்ளனர். அதனல் இதை கோட்டான் என்று தற்காலத்தில் அழைப்பர். குடுமியுள்ள ஆந்தை வகைகளுள் இது சிறியதாகும். கூகைக்குத் துய்த்தலை இருப்பதாக சங்கப் பாடல்கள் கூறும். ஆனல், மதுரைக்காஞ்சியில் மட்டும் 'குடுமிக்கூகை குராலொடு முரல' என்று கூறப்பட்டிருக்கும் வரியில் கூகைக்குக் குடுமியிருப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது. இது தவறு என்று கருதவேண்டும். அல்லது கூகைக்குரால் என்று அஃதாவது குடுமியுடைய கூகைபோன்ற குரால் என்று பொருள் கொள்ளவேண்டும். இங்கு இருபெயரொட்டாகக் கருதலாம். குராலை எளிதில் மக்கள் காணமுடியாது. குரலைக் கேட்டுத்தான் குராலை அறியமுடியும். குரால் திருப்பித் திருப்பி ஒரே முறையாக 'வூட்', 'வூட்' என்று இரவு முழுவதும் ஓசையிடும் என்று பறவை நூலார் கூறுவர். 'ஒராஅ உருட்டும்' குரால் என்று அகநானூறு கூறுவது கவனிக்கத்தக்கது. ஒரே குரலில் ஓயாது திருப்பித் திருப்பி ஓசையிடுவதால், உருட்டுவதால் 'ஒராஉருட்டும்' என்றனர். 'தூற்றும்' என்றும் புறநானூறு கூறுகின்றது. இது குழறுவதுமுண்டு என்று கூறுவர். சங்க நூல்களும் இதைக் கூறுகின்றன. இதன் குரலையும் கேட்டு மக்கள் அஞ்சுவதுண்டு.

(தொடரும்)

---

## ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும்

முற்காலத்திருந்த தமிழ்ப் புலவர் நிலையினையும் பிற்காலத்துள்ள தமிழ்ப் புலவர் நிலையினையும் ஒப்பிட்டுப் பார்த்தாலன்றி, இனிவருந் தமிழ்ப் புலவர் தமது நிலையினை மேன்மேல் உயரச் செய்தலும், இத் தமிழ் நாட்டின்கண் உள்ள கல்வியறிவில்லாத் தமிழ் மக்களைக் கல்வியறிவில் உயர்த்துதலும் ஏலா.

—மறைமலையடிகள்

''முற்காலப் பிற்காலத் தமிழ்ப் புலவோர்'' பக். க.

# ஆய்வுக் கோவை—ஒரு திறன் ஆய்வு

[பேராசிரியர், ஆ. சிவலிங்கனார், மயிலம்]

அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சார்பு வெளியீடாகிய இந்தியப் பல்கலைக் கழகத் தமிழ் ஆசிரியர் மன்ற மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை என்ற தொகுப்பில் சிலப்பதிகாரம் பற்றிய கட்டுரைகள் சிலவுள. அக் கட்டுரைகளிற் கண்ட கருத்துக்கள் சில இக்கட்டுரையில் ஆராயப் படும்.

(1)

ஆய்வுக் கோவையில் முதல் கட்டுரையாக "முதற் காப்பியத்தின் முரண்தொடை" என்பது காணப்படுகிறது. தில்லிப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர், ஆறுமுகனார் எழுதிய கட்டுரை அது. அக்கட்டுரையில் அவர், 'கண்ணகிக்குக் கோவலன்பால் காதல் இருந்ததே இல்லை' என்ற முடிபு கூறியுள்ளார். அதற்கு அவர் காட்டும் சான்றுகள் பின் வருவன:

(1) இளங்கோவடிகள் கண்ணகியை அறிமுகப் படுத்திய போது,

"வயங்கிய பெருங்குணத்துக் காதலாள்"

(மங்கல. 28-29)

என்றார். "இல்லறத்துக்குரிய இனிய பண்புகளைக் காதலிப்பவள்" என்பது அவ்வரிக்குப் பொருள் ஆதலின், 'காதல்' என்றது கோவலன்பால் கொண்ட காதல் அன்று.

(2) அமளிமிசை யமர்ந்திருக்கும் காதலர்களை,

"கயமலர்க் கண்ணியும் காதற் கொழுநனும்"

(மனையறம். 11)

என்று கூறிய அடிகள் காதலைக் கோவலனுக்கு மட்டுமே கூறியிருக்கிறார்.

(3) "வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்
கண்டுமகிழ் வெய்திக் காதலிற் சிறந்து"
(மனையறம். 24-25)

என்னுமிடத்திலும் கோவலன் கண்ணகிபால் கொண்ட காதலே கூறியுள்ளார் அடிகள்.

(4) தாரும் மாலையும் மயங்கக் கூட்டம் பெற்ற பின்னரேனும் கண்ணகி நெஞ்சம் காதலால் நிரம்பியிருக்க வேண்டுமல்லவா? அவ்வமயத்தும்,

"தீராக் காதலின் திருமுகம் நோக்கிக்
கோவலன் கூறும் ஓர் குறியாக் கட்டுரை"
(மனையறம். 35-6)

என்று கோவலன் காதலைத்தான் மிகுதிப் படுத்துகிறார் அடிகள்.

(5) மாதவிபால் கோவலன் பிரிந்தமைக்கு வருந்திய கண்ணகி அவன் காதலை இழந்தமைக்கு வருந்தவில்லை. அறவோர்க் களித்தல் முதலிய இல்லறப் பயன்களை இழந்தமைக்கே வருந்தினுள்.

இவ்வைந்து சான்றுகளும் பொருந்துமா எனக் காண்போம்.

1. கண்ணகியை அறிமுகப்படுத்தும்போது அவள் இயல்பு கூறுவது முறையே தவிர அவள் காதல் குறிப்பிடப்பட வேண்டுவதில்லை. இன்னும் திருமணம் நிகழவில்லையே. அதனுல் அறிமுகத்தில் கண்ணகியின் காதல் குறிப்பிடப்படவில்லை என்பது தேவையற்றது.

"வயங்கிய பெருங்குணத்துக் காதலாள்" என்பதற்கு "விளங்கிய பெரிய குணங்களாற் காதலிக்கப் பட்டவள்" என்பது பொருள். "குணங்களைக் காதலித்தவள்" என்றும் ஆம் இச் சிறப்பே கண்ணகி தன் கணவன் கோவலன்மீது தீராக்காதல் கொள்ளும் இயல்பு முன்னரே வாய்க்கப் பெற்றவள் என்பதை யுணர்த்தும். இல்லறப் பயனுக்கு வேண்டிய குணங்களைக் காதலிப்பவள் என்றது கணவனைக் காதலிப்பதை நீக்கியா சொல்லப் பட்டது? கணவனைக் காதலிக்கும் இயல்பில்லாதவள் இல்லறப் பயனும் குணங்களை எப்படிக் காதலிக்க

முடியும்? ஆனல் அடிகள் அறிமுகமே தனக்குவரும் கணவனிடம் தீராக்காதல் கொள்ளும் இயல்பினள் கண்ணகி என்பதைப் புலப்படுத்தும்.

2. அமளிமிசை யிருந்த காதலர்களைக் கூறியபோது, ''கயமலர்க் கண்ணியும் காதற் கொழுநனும்'' என்ருர் அடிகள். இதில் காதற் கொழுநன் என்றதால் காதல் கோவலனுக்கு மட்டுமே கூறியதாகக் கட்டுரை யாசிரியர் கருதி விட்டார். கண்ணகிபால் காதலையுடைய கொழுநன் என்பது அவர் கொண்ட பொருள். கண்ணகியால் காதலிக்கப்பட்ட கொழுநன் என்றும், கண்ணகியைக் காதலித்த கொழுநன் என்றும் பொருள் கொள்ளலாமே. ''பெருங்குணத்துக் காதலாள்'' என்பதற்குப் பெரிய குணங்களாற் காதலிக்கப் பட்டவள்'' என்று உரையாசிரியர்கள் பொருள் கொண்டார்களே!

3. நிரை நிலை மாடத்து அரமியம் ஏறச் செல்லும் கண்ணகியும் கோவலனும் மணவாய்த் தென்றலைக் கண்டு மகிழ்வெய்தி அதனுல் காதலிற் சிறந்தார்கள். அக்காதல் இருவர்க்கும் ஒத்து மிகுதலாலே கூட்டம் வேண்டி அரமியம் ஏறினுர்கள் இதுவே அடிகள் கூறியது. காதலிற் சிறந்தவன் கோவலன் ஒருவனே என அடிகள் கூறவில்லை.

4. கூட்டத்தின் முடிவில் கண்ணகிபால் கொண்ட தீராக் காதலால் கோவலன் ஓர் கட்டுரை சொல்லலானுன். கட்டுரை சொல்பவன் கண்ணகியைப் பலபடியாகப் பாராட்டினுன். அப்படிப் பாராட்டக் காரணம் தீராக்காதல். இச் செய்தியைச் சொல்ல வந்த அடிகள் காதலைக் கோவலனிடம் சேர்த்துக் கூறுவது தவிரக் கண்ணகியைப் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லையே.

காதல் என்றும் தீராதது. காமம் இன்ப முடிவில் தீர்வது—குறைவது. அதனுல் காதல் வேறு; காமம் வேறு. இன்பக் கூட்டத்தின் முன்னரும் பின்னரும் ஒத்திருப்பதே காதல். கோவலனுடன் தென்றல் கண்டு காதலிற் சிறந்து அரமியம் ஏறிக் கூட்டம் கொண்ட கண்ணகி, கூட்டத்தின் பின்னரும் தீராக் காதலுடையவளாகவே இருந்ததால்தான் கோவலன் கட்டுரை கூறினுன். காதலுணர் வில்லாதவளிடம் காதலால் கட்டுரை கூற இயலாது; கூறினும் சிறவாது.

5. 'கோவலன் பிரிவில் கோவலன் காதலை இழந்தமைக்கு வருந்தாமல் இல்லறப் பயனும் அறவோர்க்களித்தல் முதலியவற்றை இழந்தமைக்கே வருந்தினுள்' என்ற கருத்தும் பொருந்துவதில்லை. கோவலன் காதலை இழந்தமைக்கும் பெரிதும் வருந்தினுள் கண்ணகி. இதனைக் கண்ணகியே கூறியுள்ளாள்.

இல்லறப் பயனை இழந்த தன்னைக் கோவலன் தாயும் தந்தையும், தம்மகன் உடன் இல்லாததால் வந்த முனிவை மறைத்துவரும் கண்ணகியின் பெருங் குணத்தைக் கண்டு, அவள்பால் அன்பு சிறந்து, அருள் மொழி கூறிப் பாராட்ட, அது கேட்டுப் பொய்யான புன்முறுவல் கண்ணகி கொள்ள, அம்முறுவலின் பொய்மை கண்டு அவர்கள் மிகவும் வருந்தினுர்கள் இச் செய்தி கோவலனிடம் கண்ணகி கூறியது தான் கொண்ட புன்முறுவலே தன் உள்ளத் துணர்ச்சியைக் காட்டிக் கொடுத்துவிட்டது. அதனுல் அது பொய் முறுவலாகி விட்டது என்ருள்.

> "நோயும் துன்பமும் நொடிவது போலும் வாயல் முறுவல்"
> (கொலைக்கள. 79-80)

என்பது கண்ணகிக் கூற்று. நோய் என்பது உடல் துன்பம். துன்பம் என்பது மனக்கவலை. எனவே கோவலன் பிரிவால் மனக்கவலை யடைந்தாள் என்ருல் அவன் காதலை யிழந்தமை யால்தான் கவலை கொண்டாள் என்று சொல்லவா வேண்டும்?

இனி இளங்கோவடிகள், கவுந்தியடிகள், கண்ணகி ஆகியவர்கள் கூற்றிலிருந்தும் சான்று காட்டுவேம்.

1. இளங்கோவடிகள் கண்ணகிக்குக் கோவலன் கணவன் என்ற மட்டில் கூருமல் பல இடங்களில் காதலன் என்றும் கூறியுள்ளார். காதற்கணவன் என்று சேர்த்தும் கூறியுள்ளார்.

மாதரி வீட்டில் கண்ணகி ஐயை என்பாளுடன் உணவு சமைத்ததைக் கூறவந்த அடிகள் "கையறி மடமையிற் காதலற்கு ஆக்கி"னுள் என்ருர். தன் கடிமலர் அங்கையின் காதலன் அடிநீர் மாற்றினுள் (கொலைக்கள 38) என்ருர்.

வாழ்த்துக் காதைப் பகுதியில் அடித்தோழி சொல்லாக வந்ததில்,

"கற்புக் கடம்பூண்டு காதலன் பிற்போந்த பொற்கொடி"

என்றும், அடித்தோழி அரற்றில்,..................

"காதலன் தன் வீவும் காதலிநீ பட்டதூஉம்"

என்றும் இருவர் காதலையும் புலப்படுத்தியுள்ளார் அடிகள்.

2. கவுந்தியடிகள் மாதரி என்ற இடைக்குல மடந்தையிடம் கண்ணகியை அடைக்கலப் படுத்தியபோது,

"கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு
நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்
தன்துயர் காணுத தகைசால் பூங்கொடி"

(அடைக்கலம். 139-41)

என்று கூறினுர். "கதிரின் வெம்மையால் தன் காதலன் மெய் வருந்திய தென்று நடுங்கு துயரமுற்று நாவும் புலர வாடித் தன் துயர் என வேறு காணுத பூங்கொடி" என்பது இவ்வரிகளின் பொருள். கவுந்தியடிகள் மதுரை வரையிலும் உடன் வந்தவராதலின், கண்ணகி கோவலனிடையே உள்ள தீராக் காதல் இயல்பை நன்கறிந்தவர். அதனுல் "கண்ணகி தன் காதலன் துயரறிந்தாளே தவிரத் தன் துயர் என்று ஒன்று அறியவில்லை" என்று கூறினுர்.

"இன்பதுன்பம் தோகைக்கும் தோன்றலுக்கும் ஒன்றும்
வருதலின் தன்துயர் காணு என்றுர்"

என அடியார்க்கு நல்லார் சிறப்புரை எழுதியதும் இங்கே கருதத் தக்கது.

"தோகைக்கும் தோன்றற்கும் ஒன்ருய் வரும் இன்ப
துன்பங்களே" (71)

என்பது திருச்சிற்றம்பலக் கோவை. இன்ப துன்பங்கள் ஒன்ருய் வரும்—வந்தது—என்ருல் காதலும் அப்படித்தானே வரும்?

3. இனிக் கண்ணகியே தன் கணவனைக் 'காதலன்' என்று கூறியதைக் காணலாம். ஆய்ச்சியர் குரவை முடிவில் ஊர் அரவம் கேட்ட ஒருத்தி வந்து நின்றபோது, ஏதோ தீங்குண்டு என்றுணர்ந்த கண்ணகி, அவளைப் பார்த்து,

"எல்லாவோ
காதலற் காண்கிலேன் கலங்கி நோய்
..........................................கைம்மிகும்
ஏதிலார் சொன்ன தெவன்" (துன்பமாலை. 11-15)

என்று கேட்டாள். பின்னர்க் கணவன் கொலைப்பட்டான் என்பது கேட்டு மயங்கியவள்,

"காதற் கணவனைக் காண்பன்......
காதற் கணவனைக் கண்டால் அவன் வாயில்
தீதறு நல்லுரை கேட்பன்"

என்று கூறினாள்.

இறுதியாக ஒன்று. "கோவலன் எவ்வளவுதான் கூடிப் பாராட்டியும் கண்ணகிபால் காதல் வாழ்வைக் காண முடியாது தோல்வியுற்றான்" என்று கட்டுரையாசிரியர் முடிப்பதும் பொருத்தமில்லை. கோவலன் கண்ணகியைப் புகழ்ந்து,

"உலவாக் கட்டுரை பலபா ராட்டித்
தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்து"

சென்றான் என்றார் இளங்கோவடிகள். கோவலன் மகிழ்ந்தான் என்று கூறியிருக்கக் கண்ணகியிடம் கோவலன் காதலைக் காணாது தோல்வியுற்றான் என்பது எவ்வாறு பொருந்தும்? எனவே எவ்வகையிலும் கட்டுரையாளர் கருத்து பொருத்த மற்றதேயாம்.

அடுத்து மாதவி பற்றிய ஆய்வு வரும்.

———

## வேறு எம்மொழியிலேனும் உளவோ?

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையும் முற்றும் எடுத்து விளக்கும் திருக்குறள், நாலடியார் போன்ற அரும்பெரும் நூல்களை நம் செந்தமிழ் மொழியின்றி வேறெந்த மொழியும் உடைய தாமோ? உலக வியற்கை பிறழாது பாடிய பத்துப்பாட்டு, கலித்தொகை முதலான பழைய தமிழ்ப் பாட்டுகளுக்கு நிகரானவை வேறெந்த மொழி யிலேனும் எடுத்துக் காட்டல் இயலுமோ! சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் பெருந் தமிழ்க் காப்பியங்களோடு ஒத்தவை எம்மொழி யிலேனும் உளவோ!

—மறைமலையடிகள்

'அறிவுரைக் கொத்து' பக். சுசு.

# தமிழில் 'தொழிற் பெயர்'

[டாக்டர் கி. கருணாகரன், எம்.ஏ., பிஎச்.டி., டிப். இன் கன்னடா,
மொழியியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்]

தமிழ் 'வினை'யில் (Verb) தொழிற்பெயர் (Verbal Noun) என்ற ஓர் இலக்கணப்பிரிவு (Grammatical Category) உள்ளது. சொல்லியல் (Morphology) பகுதியில் தொழிற் பெயர் கீழே கொடுக்கப்பட்டுள்ள சொல்லியல் அமைப்பை (Morphological Structure) உடையதாக இருக்கிறது.

தொழிற்பெயர் : சொல்லியல் அமைப்பு.

| 1 | 2 | 3 |
| --- | --- | --- |
| வினையடி— | { காலம் காட்டும் சொல்லியன்கள் / எதிர்மறைச் சொல்லியன்கள் } | —தொழிற்பெயர்ச் சொல்லியன் |

எ. காட்டு :

| 1 | 2 | 3 | |
| --- | --- | --- | --- |
| பார் — | த்த் — | அது | > பார்த்தது |
| ஆடு — | கிற் — | அது | > ஆடுகிறது |
| எரி — | வ் — | அது | > எரிவது |
| ஓடு — | ஆத் — | அது | > ஓடாதது |

தமிழில் தொழிற்பெயருக்குப் பெயர் (Noun), வினை (Verb) ஆகிய இரு பெரும் இலக்கணப் பிரிவுகளின் தன்மைகளும் உள்ளன எனலாம்.[1] தொழிற்பெயரை வினையாக எடுத்துக் கொண்டால், இஃது ஒரு குறிப்பிட்ட எழுவாய்க்குப் (Subject) பிறகு வருவதைக் காணலாம். அதேபோல் தொழிற்பெயரைப் பெயராக எடுத்துக்கொண்டு நோக்கும்பொழுது இஃது ஒரு குறிப்பிட்ட வினைச்சொல்லுக்கு முன்பு எழுவாயாக வருவதையும் நாம் காணமுடிகிறது.

எ. காட்டு: நீ (1) கொடுப்பது-ஐ (2) நான் (3) பார்த்தேன் (4)

இங்குக் கொடுப்பது என்பது தொழிற்பெயராக வருகிறது. இதை வினைச்சொல்லாக எடுத்துக்கொள்ளும் பொழுது

1. R. Caldwell—*A Comparative Grammar of the South Indian Family of Languages*, Madras, 1959.

இதனுடைய எழுவாய், இதற்கு முன்பாக வரும் நீ என்பதாகும். அதேபோல் இதைப் பெயர்ச் சொல்லாக எடுத்துக் கொண்டால், அப்பொழுது இதற்கு உரிய பயனிலையாகப் (Predicate) பார்த்தேன் என்ற வினைமுற்று வருகிறது.

தொழிற்பெயர் மற்ற பெயர்ச்சொற்களைப்போல் வேற்றுமைச் சொல்லியன்களையும் (Case Suffixes), வினை அடைச் சொல்லியன்களையும் (Adverbial Suffixes) எடுத்துக்கொள்ளும் தன்மையுடையதாகும். மேலும் தொழிற்பெயர் 'அகப்படும் வாக்கியத்தில்'[1] (Constituent Sentence) உள்ள வினைமுற்றிலிருந்து (Finite Verb) பெறப்படுகிறது. இது பெயர்த்தொடருள்ளோ (Noun Phrase) அல்லது வினைத்தொடரில் (Verb Phrase) இருக்கும் பெயர்த்தொடருள்ளோ பொதிந்து இருப்பதையும் நாம் காணமுடிகிறது.

எ. காட்டு: அவன் வந்தான்
நான் அதைப் பார்த்தேன் }

இவ்விரு வாக்கியங்களை இணைக்கும்பொழுது நமக்கு நான் அவன் வந்ததைப் பார்த்தேன் என்ற வாக்கியம் கிடைக்கிறது. இதில் வந்தது என்ற தொழிற்பெயர் வந்தான் என்ற வினைமுற்றிலிருந்தே பெறப்படுகிறது. இந்த வந்தான் என்ற வினைமுற்று. அவன் வந்தான் என்ற வாக்கியத்தில் வருகிறது.

இவ்வாறு சொல்லியல் பகுதியில் அதன் அமைப்பில் மிகவும் எளிதானதாகக் காணப்படும் 'தொழிற்பெயர்' சொற்றொடரியல் (Syntax) பகுதியில் அதன் அமைப்பிலும் (Structure) பொருளிலும் (Meaning) மிகவும் சிக்கல் நிறைந்த ஒன்றாகக் காணப்படுகிறது.[2] தொழிற் பெயரின் இத்தன்மைகளையே இக்கட்டுரையின் மூலம் விளக்க முயற்சி செய்யப்பட்டுள்ளது.

சொற்றொடரியல் பகுதியில் 'தொழிற்பெயர்' கீழே கொடுக்கப்பட்டுள்ள ஐந்து வகையான 'இலக்கணத் தொடர்பு' களையும் (Grammatical Relationships) பொருளையும் கொண்டுள்ளதை நம்மால் காணமுடிகிறது.[3] இவ்வகையான

---

1. R. கோதண்டராமன் — 'முற்றெச்சங்கள்', செந்தமிழ், மதுரை, 1971.

2. Dr. S. Agesthialingam—'Infinitive in Tirukkural', *Aayvukkovai*, Annamalainagar, 1971.

3. ............................—*A Generative Grammar of Tamil*, [DLP, 11], Annamalainagar, 1967.

தொடர்புகளால் உண்டாகும் பொருள் மாற்றத்தை விளக்க வேற்றுமைச் சொல்லியன்களையோ அல்லது வேறு சில பின் விகுதிகளையோ (Suffixes) 'அகப்படுக்கும் வாக்கியத்தில்' (Matrix Sentence) இணைக்க வேண்டும்.

தமிழில்[1] 'தொழிற்பெயர் கீழே கூறப்பட்டுள்ள ஐந்து வகையான இலக்கணத் தொடர்புகளிலும் பொருளிலும் வருகிறது எனலாம். இவ்வாறு வருவதால் 'தொழிற்பெய ருக்கு' ஐந்து வகையான 'இலக்கண வேலைகள்' (Grammatical Functions) உள்ளன என்றும் சொல்ல முடியும்.

| இலக்கணத் தொடர்பு & பொருள் | அகப்படுக்கும் வாக்கியத்தில் இணைக்கப்பட்டுள்ள வே. சொ / பி. விகுதி |
|---|---|
| 1. செயப்படுபொருள்—பயனிலைத் தொடர்பு | (அது) + ஐ |

எ. காட்டு :

நான் நீ வந்ததைப் பார்த்தேன்

| | |
|---|---|
| 2. மூன்றும் வேற்றுமை—பயனிலைத் தொடர்பு | (அது) + ஆல் |

எ. காட்டு :

நான் அவன் கேட்டதனால் கொடுத்தேன்

| | |
|---|---|
| 3. காரணம்—பயனிலைத் தொடர்பு | (அது) + க்காக |

எ. காட்டு :

இராமன் வேலை செய்வதற்காகச் சென்றான்

| | |
|---|---|
| 4. எழுவாய்—பயனிலைத் தொடர்பு | (அது) |

எ. காட்டு :

அவன் வந்தது நல்லதாகப் போயிற்று

---

1. Dr. K. Karunakaran—*The Koollimalai Tamil Dialect* [DLP, 26], Annamalainagar, 1971.

5. நான்காம் வேற்றுமை—பயனிலைத் தொடர்பு (அது) + கு

எ. காட்டு:

நான் அவனைக் கேட்பதற்கு மறந்துவிட்டேன்.

மேலே கொடுக்கப்பட்டுள்ள வாக்கியங்கள் அனைத்தும் இரண்டு வாக்கியங்களை இணைத்தே பெறப்பட்டுள்ளன. இவற்றில் ஒன்று அகப்படும் வாக்கியம், மற்றொன்று அகப்படுக்கும் வாக்கியமும் ஆகும். கீழே கொடுக்கப்பட்டுள்ள படங்கள் எவ்வாறு இவ்வாக்கியங்கள் இணைக்கப்படுகின்றன என்பதையும், தேவையான வாக்கியங்கள் பெறப்படும் முறையையும் தெளிவாக விளக்குகின்றன.

1. செயப்படுபொருள்—பயனிலைத் தொடர்பு




> நான் நீ வந்ததைப் பார்த்தேன்.

2. மூன்றும் வேற்றுமை—பயனிலைத் தொடர்பு

நான் அதனால் கொடுத்தேன்.
அவன் கேட்டான்.




நான் [அவன் கேட்டான்] அது ஆல் கொடுத்தேன்

> நான் அவன் கேட்டதனால் கொடுத்தேன்.

3. காரியம்—பயனிலைத் தொடர்பு

இராமன் அதற்காகச் சென்றான்.
இராமன் வேலை செய்வான்.




> இராமன் வேலை செய்வதற்காகச் சென்றான்.

4. எழுவாய்—பயனிலைத் தொடர்பு

அது நல்லதாகப் போயிற்று.
அவன் வந்தான்.




> அவன் வந்தது நல்லதாகப் போயிற்று.

5. நான்காம் வேற்றுமை—பயனிலைத் தொடர்பு

நான் அதற்கு மறந்து விட்டேன்.
நான் அவனைக் கேட்பேன்.




> நான் அவனைக் கேட்பதற்கு மறந்துவிட்டேன்.

## Abbreviations :

| | | |
|---|---|---|
| வா | — | வாக்கியம் |
| பெ. தொ | — | பெயரெச்சத் தொடர் |
| வி. தொ | — | வினையெச்சத் தொடர் |
| வே | — | வேற்றுமை |
| பெ | — | பெயர் |
| வி | — | வினை |
| வி. அ | — | வினை அடை |
| வி. அ. பி | — | வினை அடை பின் பகுதி |
| இ. வே | — | இரண்டாம் வேற்றுமை |
| மூ. வே | — | மூன்றாம் வேற்றுமை |
| நா. வே | — | நான்காம் வேற்றுமை |

---

### மொழிச் செல்வம்

ஒரு நாட்டுச் செல்வங்களுள் மொழியும் ஒன்றாகும். மொழித் துணையின்றி ஒரு நாட்டார் நாகரிகமாகவும் வசதியாகவும் வாழ்வதரிது. முன்னோர் அரும்பாடுபட் டீட்டிய அறிவுச் செல்வமெல்லாம், மொழிவாயிலாகவே போற்றப்பட்டு வருகின்றது. எத்துணைச் சொற்கள் சேர்ந்து ஒரு பெருமொழியும் அதன் இலக்கியமும் அமைகின்றன! முன்னோர் வைத்துப்போன சின்னஞ்சிறு பொருள்களைக்கூடப் பொன்னே போல் போற்றுவது மக்கள் வழக்கமாயிருக்க, தொன்று தொட்டு இன்றுகாறும் கணக்கற்ற தலைமுறைகளாய்த் தொடர்ந்தும் திரண்டும் வரும் அரும்பெருஞ் செல்வத் திரட்டாகிய மொழியை, எத்துணைக் கவனமாகவும் கண்ணியமாகவும் பேணுதல் வேண்டும்!

—ஞா. தேவநேயப்பாவாணர்,
"சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்".

Linguistics (மொழியியல்):

# தமிழ் மொழி வரலாறு

[சு. சக்திவேல், M.A., M.A.,

மானிடவியல் ஆராய்ச்சித்துறை, கல்கத்தா-13

&

அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.]

தமிழ் மொழி சீனம், இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் போன்ற மொழிகளை ஒப்பத் தொன்மை வாய்ந்திருப்பதோடு, பண்டை இலக்கிய இலக்கணச் செல்வங்களையும் கொண் டிலங்குகிறது: மொழியியல் பேரறிஞர் கிரியர்சன், "திராவிட மொழிகளுள் தமிழ் மொழியே அளவிடவொண்ணுப் பண்டைக் காலம் முதல் பயின்று வருவது" என்கிருர். வடமொழி அறிஞர் இராமசாமி சாஸ்திரியாரும், "உலக இலக்கியங் களில் தமிழ் இலக்கியம் தொன்மையுடையதொன்ருக இருப் பதோடு அல்லாமல் தலைசிறந்த உலக இலக்கியங்களில் ஒன்ருகத் திகழ்கிறது" எனக் குறிப்பிட்டுள்ளார்கள். பழைமைக்குப் பழைமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் விளங்குவது நமது தமிழ்மொழியேயாகும். மொழி வளர்வது, பரிணும வளர்ச்சியிலும் (evolution) கடன் வாங்கலாலும் என்பர் வரலாற்று மொழியியல் பேரறிஞர்கள். தமிழ் மொழியின் வரலாற்றை இலக்கியம், இலக்கணம், கல்வெட்டு, பேச்சு மொழி ஆகியவற்ருல் அறியலாம். தமிழ்மொழியின் வரலாற்றை ஒலியியல் அடிப்படையில் (Phonology....) இங்கு ஆராயப்படுகிறது.

இன்றுள்ள தமிழ் நூல்களில் மிகப் பழைமையானது தொல்காப்பியம். கிரேக்கர் முதலானேர் இந்தியாவைப்பற்றி எழுதிய குறிப்புக்களில் தமிழ்ப் பெயர்களைக் காண்கிருேம். கி. மு. 2, 3ஆம் நூற்ருண்டு என்று கருதப்படும் பிராமி கல்வெட்டுக்கள் தமிழ் மொழியில் இருக்கக் காண்கிருேம். பல புலவர்களால் பாடப்பெற்ற பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு முதலியன தொன்மையான தமிழ் இலக்கியங்களாகும். மிகப் பழைமையான தொல்காப்பியத் திலும் இடைச்செருகல் உண்டென்பர். அண்மையில் ஆராயப் பட்ட கல்வெட்டுக்கள், சங்ககால இலக்கிய மொழியமைப்பு

முதலியவற்றை நோக்கும்போழ்து சங்ககால இலக்கியங்கள் கி. பி. 2ஆம் நூற்ருண்டைச் சார்ந்தனவாக இருக்கவேண்டும். இருண்டகாலமான களப்பிரர் ஆட்சிகாலத்திலும் சில இலக்கியங்கள் தோன்றின. கி. பி. 7ஆம் நூற்ருண்டிலிருந்துதான் தொடர்ச்சியான இலக்கிய வரலாறும் மொழி வரலாறும் நமக்குக் கிடைக்கின்றன. இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் உலகம் போற்றும் திருக்குறளும் சமயகாலத்துக்கு முற்பட்ட இலக்கியங்களாகும். நாயன்மார்கள், ஆழ்வார்கள் கால இலக்கியங்களைச் சமயகால இலக்கியங்கள் என்று கூறுவர். பல்லவ கால மொழிவரலாற்றையறிய நிறையக் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. நாயன்மார், ஆழ்வார்களின் பக்திப் பாடல்களிலிருந்தும் கம்பர், ஒட்டக்கூத்தர் போன்ற புலவர்களின் நூற்களிலிருந்தும், பல்லவ, சோழர் காலக் கல்வெட்டுக்களிலிருந்தும், நன்னூல், வீரசோழியம் முதலிய இலக்கண நூல்களிலிருந்தும் இடைக்காலத் தமிழ் வரலாற்றை அறிகிருேம்.

தமிழ் மொழியின் வரலாற்றைப் பல பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. சங்ககாலத்திற்கு முற்பட்ட பகுதி
   [(தொல்காப்பியமும் குகைக் கல்வெட்டுக்களும்)
   (Cave Inscriptions....) இவற்றில் அடங்கும்]

2. சங்ககாலம்
   (எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும் இவற்றில் அடங்கும்)

3. சங்ககாலத்திற்குப் பிற்பட்ட பகுதி
   (திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை)

4. சமயகாலம்
   (நாயன்மார்களும் ஆழ்வார்களும் இயற்றிய சைவ, வைணவ இலக்கியங்களும் கல்வெட்டுக்களும்)

5. சோழர் காலம்
   (சீவகசிந்தாமணி, பெருங்கதை, இராமாயணம் மற்றும் சோழர் கால கல்வெட்டுக்கள்)

6. நாயக்கர் காலம்

7. தற்காலம் (முற்பட்ட பகுதி)
(சிற்றிலக்கியங்கள்—மடங்களின் தொண்டு)

8. தற்காலம் (பிற்பட்ட பகுதி)
(போர்த்துகீசியர், டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலேயர் ஆதிக்கத்தால் ஏற்பட்ட மொழி வளர்ச்சி—20ஆம் நூற்றுண்டு—கிளை மொழி ஆராய்ச்சி (Dialect Survey) முதலியன)

தமிழ் மொழியின் வரலாற்றைப் பழந்தமிழ் (Old Tamil), இடைக்காலத் தமிழ் (Middle Tamil), தற்காலத் தமிழ் (Modern Tamil) என மூன்று பெரும்பிரிவுகளாகவும் பிரிக்கின்றனர். மேலும் பழந்தமிழையே முன்னைய பழந்தமிழ் (Early old Tamil), மத்திய பழந்தமிழ் (Middle old Tamil), பின்னைய பழந்தமிழ் (Late old Tamil) என முப்பிரிவுகளாகவும் பிரிக்கின்றனர்.

அ, இ, உ, எ, ஒ என்ற ஐந்து குறிலும் அவற்றிற்கினமான நெடிலும் பழைய தமிழ் உயிர் ஒலியன்களாகும் (Vowel phonemes). தொல் திராவிடத்திலும் (Proto-Dravidian....) இவ்வைந்து உயிர்களும் அவற்றிற்கினமான நெடிலும் உள்ளது. தமிழில் இன்று ஆறு வல்லெழுத்துக்கள் இருப்பினும், க, ப, த தான் மிகப் பழைய ஒலிகளாகக் கருதப்படுகின்றது. மேலும் எல்லாத் திராவிட மொழிகளிலும் 'ச'கரம் இருத்தலால், அது பழைய ஒலியேயாம். பழந்தமிழில் 'ங' என்பது தனி ஒலியன் (phoneme) என்று கூறுவதற்கில்லை. இது மொழியிடையில் மட்டும் வரும். ஞ, ந, ம, மொழிக்கு முதலிலும் இடையிலும் கடையிலும் வரும். வல்லெழுத்துக்கள் ஒலிப்பில்லா ஒலி (Voiceless) யாகவே இருந்தன. 'ச'கரம் மொழிக்கு முதலில் வந்தபோழ்து அது கெட்டது என்பர். எடுத்துக்காட்டாக, தென்திராவிட மொழியான தோடாவில் தொல்திராவிட 'ச'கரம் 'த'கரமாக மாறியமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். தொல்காப்பியர் காலத்தில் ஆய்தம் பெருவழக்காகிவிட்டது. தொல்காப்பியத்தை ஆராயும்பொழுது, 'ண', 'ந', 'ஞ' முதலியன ஒலியன்களாக (Phonemes) உள்ளன. 'ற' வல்லினமாகவே ஒலிக்கப்படுகிறது. நிகழ்கால இடைநிலை விகுதிபற்றி சான்று இல்லை. உளப்பாட்டுத்தன்மை, பன்மை வேறுபாடு காணப்படுகின்றது. மேலும் தொல்காப்பிய நூற்பாக்களில் 'என்மனார்', 'என்ப' எனச் சுட்டுதலால் அவருக்கு முன்னும் இலக்கண நூல்கள் இருந்திருக்க வேண்டுமென ஊகிக்கவேண்டியுள்ளது.

'ஆ, ஏ, ஓ அம்மூன்றும் வினு', (தொல்-32) பழந்தமிழ் இலக்கியத்திலும் இடைக்கால இலக்கியத்திலும் சான்று இல்லை. ஆனுல், திராவிட மொழிகளான தோடா, கன்னடம், துரு, தெலுங்கு, கோலாமி போன்ற திராவிட மொழிகளில் 'ஆ'காரம் காணப்படுவதால் தொல் திராவிடத்திலும் அஃது இருந்திருக்கவேண்டும். சங்க இலக்கியமான தொகையும் பாட்டும் தொல்காப்பியத்திற்குப் பிந்தியதால் அவற்றின் மொழிப் பண்பு ஓரளவு மாறியிருப்பது இயல்பே. ஆனுல், தொல்காப்பிய இலக்கணமும் சங்க இலக்கியமும் பல பண்புகளில் ஒத்துள்ளன. 'ர'கரமும் 'ழ'கரமும் குறில் கீழ் ஒற்ருக வராது (தொல். 49). 'ஞ'கரம் 'ஒ'கரத்தோடு மெய்யோடு மொழிக்கு முதலில் வரும் (ஞொள்கி, அகம். 312) எண்ணுப் பெயர். 'அன்'சாரியை ஏற்கும் என்பது தொல் திராவிடத்திற்கும் பொருந்தும். திராவிட மொழிகட்கே உரித்தான 'ச'கர முதன் மொழிச் சொற்களும் சங்க இலக்கியத்தில் வந்துள்ளன; (சவட்டு அகம். 37. 5. 14) சண்பகம் (குறுந். 75) சந்தனம் (அகம். 23. 4) ஞகர முதன் மொழிச் சொற்களும் சங்க இலக்கியத்தில் வந்துள்ளன (ஞமலி, அகம். 122. 9., புறம். 74. 3) நான்கு என்ற எண்ணைக் குறிக்கும் தொல் திராவிடச் சொல் "நால்கு" பத்துப்பாட்டில் வந்துள்ளது. 'ல'கர 'ன'கர மாற்றம் தமிழ், மலையாளம், தோடா, கோத்தா மொழிகட்குரிய மாற்றமாகும்.

சங்க இலக்கியம் என்று சிறப்பாகக் குறிக்கப்பெறுவன எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமே யாகும். மொழிவரலாற்றில் பழந்தமிழ் (Old Tamil) என்று இக்கால எல்லையைக் குறிப்பிடுவது உண்டு. இவற்றெடு காலத்தில் முந்திய தொல்காப்பியமும் காலத்தால் பிந்திய சிலம்பு, மணிமேகலை, குறள் முதலியன இவற்றுள் அடங்கும்.

சங்ககாலத்தில் சமஸ்கிருதம், பிராகிருதம் பாலி சொற்கள் தமிழ்மொழியில் கலந்தன. சங்கால மொழியமைப்பில் 'ண'கர 'ன கர வேற்றுமை உண்டு. (மணம், அகம், மனம் குறுந்.) 'ந'கரமும் 'ன'கரமும் பழந்தமிழில் தனித்தனி ஒலியன் (Phoneme) களாகும். (வெரிந். தொல். 300, அகம். 37. 10, வரின், பதிற்று. 4. 10, சிலம்பு 2. 3). நிகழ்கால இடைநிலை 'கின்று' 'கிறு' மிகவும் குறைவாகவே பயின்று வருகின்றன. பழந்தமிழில் உறழ்ச்சி (Free Variation) அதிகமாகவே உள்ளது. [அறம்-அறன், நிறம்-நிறன்]. எதிர்கால விகுதியாக 'கு'கரமும் 'வ'கரமும் பயன்படுத்தப்பட்டுள்ளது. (செய்குவேன், புறம். 304, காண்குவம் (ஐங். 112). முன்னிலைப்

பன்மைப்பெயராக 'நீயிர்' 'நீர்' என்ற வடிவங்களே உள்ளன. 'நீமும்' 'நீங்களும்' இடைக்காலத்தில் வந்தனவாகும். 'யான்' 'நான்' என மாறியுள்ளது. எண்ணுப்பெயர் 'அன்'சாரியை இன்றி வந்துள்ளது. பலர்பால் விகுதியான 'ர'கரத்தின் பின் 'கள்' விகுதி சேர்க்கப்பட்டுள்ளது. [அரசர்கள், சிறுமியர்கள் முதலியன]. 'ய'கரத்தின் பின்வரும் 'த'கரம் 'ச'கரமாக மாறியுள்ளது (Palatalization....).

ஆய்த்தி > ஆய்ச்சி

முன்னிலைப் பன்மையைக் குறிக்கும். 'நீம்' சீவகசிந்தாமணியில் வந்திருப்பினும், அஃது பழங்காலத்தில் பேச்சு வழக்கில் இருந்திருக்கவேண்டும். கின்று போன்ற நிகழ்கால இடைநிலைகள் அகநானூறு, பரிபாடல் முதலியவற்றில் காணப்படுகின்றன. 'கன்' ஆண்பால் விகுதியாகத் தொல் திராவிடத்தில் காணப்படுவது போன்று, பழந்தமிழிலும் உள்ளது. மொழிக்கு இடையில் வரும் 'ய'கரம் 'ச'கரமாக மாறும் என்பர் ஒப்பிலக்கணத்தார். 'உசிர்' (உயிர்) போன்ற சொற்களும் இடைக்கால நூல்களில் காணப்படுகின்றது. விகுதியில் வரும் 'எ'கரம் 'அ'கரமாகத் திரியத் தொடங்கியது. (வந்தனென்-வந்தனன்.)

சங்ககாலத்தையடுத்த இலக்கிய நூல்களில் சமஸ்கிருதம், பிராகிருத, பாலி சொற்கள் நிறையத் தமிழில் வந்து கலந்துவிட்டன. 'ந'வுக்கும் 'ன'வுக்கும் வேறுபாடு இல்லாமல் போய்விட்டது. நிகழ்கால இடைநிலையான கின்று, கிறு அதிக அளவில் பயின்று வந்துள்ளன.

பல்லவ காலத்தில் மதங்களுக்கிடையே எழுந்த போராட்டங்களின் விளைவாக மணிப்பிரவாள நடைக்கு வித்து ஊன்றப்பெற்றுச் சோழர் காலத்தில் அஃது தழைத்தோங்கியது. இதனால் தமிழில் வடசொற்கள் நிறையப் புகுந்தன. பேச்சு வழக்கிலுள்ள சொற்கள் ஆழ்வார் நாயன்மார் பாக்களிலும் புகுந்தன. இக்காலத்தில் வல்லண்ணச் சாயல் பெறுதல் (Palatalization...) அதிகமாக உள்ளது. இக்காலத்தில் 'ர'வுக்கும் 'ற'வுக்கும்; 'ழ'வுக்கும் 'ல'வுக்கும் உறழ்ச்சியைக் காண்கிறோம். இன் > இல் ஆக மாறுதலைக் (ஏழாம் வேற்றுமை) காண்கிறோம். 'ந'கரம் 'ஞ'கரமாகும் வழக்குப் பெறுகிற்று. வடமொழிச் செல்வாக்கால் டகரம் நாமடி (retroflex....) எழுத்தாயிற்று. பல்லவர் காலக் கல்வெட்டுக்களில் 'ற'கரத்திற்கும் 'ர'கரத்திற்கும் உறழ்ச்சி (Free variation...) காணப்படுகிறது. 'ந'

கரமும் 'ன'கரமும் ஒன்ருயிற்று எனக் கூறலாம். மொழியின் இடையிலும் கடையிலும் வருவதனை 'ன'கரம் என்றும் மொழி முதலில் வருவதனை 'ந'கரம் என்றும் வேறுபடுத்தினர். இக்காலத்தில் பெரும்பாலான சொற்கள் உகரச்சாரியை பெற்று வந்தன (மண்ணு).

சோழர் காலத்தில் சமஸ்கிருத குழிந்துர சொலிகளும் (Sibilants), பிளந்துர சொலிகளும் (Fricatives), ஒலிப்புடை ஒலி களும் (Voiced) தமிழில் இடம் பெற்றன. தற்பவத்தைக் காட்டிலும் தற்சமம்தான் அதிகமாக உள்ளது. ஒலிப்பில்லா, ஒலிப்புடை மெய்யொலிகளின் வேற்றுமை நிலைபெறத் தொடங் கியது. மேலும் இக் காலத்தில் பிராகிருத வழக்குக் கொஞ்சம் குறைந்து சமஸ்கிருத வழக்கே மேலோங்கியது. மொழிக்கு முதலாகாத மெய்யொலிகள் மொழிக்கு முதலாதலைக் காண் கிருேம். 'ந'கரம் 'ஞ'கரமாகும் வழக்கு அருகியது எனலாம். ஞாயிறு > நாயிறு என வழங்கத் தலைப்பட்டன. 'ழ'கரம் 'ள'கரமாக ஒலித்தல் பெருவழக்காகப் பெருகிவிட்டது. 'ட' 'ற' மாருட்டமும் நிலைபெறத் தொடங்கி விட்டது. வட மொழிச் சொற்கள் தமிழில் புகும்போது ஏற்படும் மாற்றங்களை நன்னூலார் குறிப்பிட்டுச் சொல்கிருர். மொழிக்கு முதலாகாத மெய், உயிர் எழுத்து ஒன்றினைப் பெற்று வரும் (ராமன் > இராமன்). சோழர் காலத்திலேயே மெல்லினத்திற்குப் பின்னும் உயிரெழுத்துகளுக்கிடையிலும் வரும் வல்லெழுத்து ஒலிப்புடை ஒலியாக (Voiced) மாறிய தெனலாம். வடமொழிச் சொற்கள் தமிழில் வழங்கும்போது ஷ, க்ஷ 'ச'வாக வழங்கு வதைக் காண்கிருேம். 'ர'கர 'ற'கர வேற்றுமை இல்லை யென்றே கூறலாம். சோழர்காலக் கல்வெட்டுக்களில் இவ் வேற்றுமையைக் காண்பது அரிது. 'இ'கரம் 'உ'கரமாக மாறி யதையும் 'ஐ'காரம் 'அ'கரமாகவும் 'இ'கரமாகவும் மாறத் தலைப்பட்டதைச் சோழர்கால இலக்கியங்கள் மூலம் அறி கிருேம்.

முஸ்லீம் ஆதிக்கத்தில் அராபி, பெர்சியன், உருது வார்த்தைகள் நிறையத் தமிழில் கலந்தன. இவற்றின் விளை வாக Z, F, ஷ, ஸ போன்ற ஒலிகள் தமிழில் புகுந்தன. மயங்காத எழுத்துக்கள் மயங்குகின்றன. மொழிக்கு முதலா காத எழுத்துக்கள் முதலாகின்றன. (டம்பம், டமாரம்), ஈரு காத எழுத்துக்கள் ஈருகின்றன. (கோர்ட்) இதனைத் தொடர்ந்து, போர்த்துகீஸ், டச்சு, பிரெஞ்சு, ஆங்கில மொழி களின் செல்வாக்கால் தமிழ்மொழி பல்வேறு நிலைகளில் வளர்ச்சியடைந்தன என்று கூறலாம். வீரமாமுனிவர் காலத் திற்குள் ஒலிப்பிலா ஒலி, ஒலிப்புடைய ஒலி என்ற வேறுபாடு

நிலைபெற்று விட்டது. இன்று தமிழை எழுதப் பயன்படுத்தப் படும் எழுத்துக்கள் கிரந்தத்தினின்றும் வளர்ந்து, பல்லவ, சோழ காலத்தில் சில மாற்றங்களுக்காகி இன்றைய வடிவத் தைப் பெற்றன. இன்றைய தமிழில் ஒலிப்பிலா, ஒலிப்புடை வல்லெழுத்துக்கள், தனி ஒலியன்களாகும். ஆனால், இத் தகைய வளர்ச்சியைக் கிராமப்புற மக்களின் பேச்சில் காண்பது அரிதாகும். கமில் சுவலபில் (Kamil Zvelebil) போன்றோர் மெய்யொலிகளை இரண்டு பிரிவாகப் பிரிக்கின்றனர். இக் காலத் தமிழில் மூக்கின உயிர் (Nasal Vowel) வளர்ச்சி பெற்றது குறிப்பிடத்தக்க தொன்றாகும். தொல்காப்பியர் காலத்திலேயே இதற்குரிய வித்து விதைக்கப்பட்டிருக் கின்றது. பேச்சு வழக்கில் மொழியீற்று, ம, ன, ள, ல போன்றவை கெடும்போழ்து, அதனை யடுத்த உயிர் மூக்கொலி பெறுகிறது.

| | |
|---|---|
| maram > marā̃ | 'tree' |
| avā̃ | 'He' |
| ava | 'She' |
| Vandē | 'I came' |
| Vandē | 'You came' |

தொல்காப்பியரே தமிழ்நாட்டைப் பன்னிரண்டு பிரிவாகப் பிரித்து, அவற்றில் வழங்கும் கிளைமொழிகளைப் (dialects) பற்றிக் குறிப்பிட்டுச் செல்கிறார். திசைச் சொல்லுக்கு இலக் கணமும் வகுத்துள்ளார். வீரசோழியமும் மூன்று கிளைமொழி களைப்பற்றிப் பேசுகிறது. கொங்குநாட்டுத் தமிழில் 'ழ'கரம் 'ள'கரமாக (நாழி > நாளி, உழக்கு > உளக்கு) ஒலிக்கப் படுவதையும் சோழநாட்டில் 'ள'கரம் 'ழ'கரமாக ஒலிக்கப்படு வதையும் (விளக்கு > விழக்கு, இளமை > இழமை) காண் கிறோம். தமிழகத்தில் பல கிளைமொழிகள் உள்ளன. பேச்சுத் தமிழ் தமிழகம் முழுதும் ஒரே மாதிரியாக இல்லை. நாஞ்சில் நாட்டில் பேசும் தமிழுக்கும் சென்னையில் பேசும் தமிழுக்கும் வேறுபாடு உண்டு. குறிப்பிட்ட ஒரு சமூகக்குழு தனக்குள் ஒத்துழைப்பதற்கு என்று ஏற்பட்ட மரபுவழிப்பட்ட பேச் சொலிக் குறியீடே மொழியாகும். தனிப்பட்ட ஆள் பேசும் பேச்சினைத் தனியார் பேச்சு (idiolect) என்று குறிப்பிடுவ துண்டு. கிளைமொழி என்பது ஒருவருக்கொருவர் புரிந்து கொள்ளும் அளவில் வேறுபாடு அற்று இருப்பதாகும். ஒரு கிளைமொழிக்குள்ளேயே அந்தந்தச் சாதிப் பிரிவினர்க்கேற்ப உட்கிளை மொழிகளும் உண்டு. அந்தந்தச் சாதியினர்

தங்களுக்குள் பேசிக் கொள்ளும்பொழுது இக்கிளை மொழியைப் (Social dialect...) பயன்படுத்துவர். இச்சாதி பேச்சுத் தமிழையும் அடக்கி அப்பகுதியில் பேசுகின்ற பேச்சினை இடப் பேச்சு மொழி (Regional dialect....) என்று கூறுவர். நாஞ்சில் நாட்டுத் தமிழ், கோயமுத்தூர்ப் பேச்சுத் தமிழ், சென்னை பேச்சுத் தமிழ் எனப் பலவாருக இருப்பினும், படித்த நாஞ்சில் நாட்டாரும் படித்த சென்னையில் உள்ள ஒருவரும் தங்களுக் குள் பேசிப் புரிந்து கொள்கின்றனர். இந்த வட்டாரப் பேச்சுத் தமிழையும் அடக்கிப் பொதுப்பேச்சுத் தமிழாக அது திகழ் கிறது. பொதுப் பேச்சுத் தமிழ், இலக்கியத் தமிழில் அடங்காது. ஆனுல், ஒன்றுக்கொன்று தொடர்புண்டு என்பதைக் கீழ்வரும் படம் நன்கு விளக்குகிறது. இங்கே




குறிப்பிட்டுள்ள இலக்கியத் தமிழ் எழுதுவதற்கு மட்டுமே பயன்படுத்தப்படுகிறது.

தமிழ் நாட்டில் பேசப்படும் பல்வேறு கிளைமொழிகளுக் கிடையே (dialects) உள்ள உறவையும் நெருக்கத்தையும் இப் படம் நன்கு விளக்குகிறது.




தமிழ் நாட்டில் பேசப்படும் பேச்சுமொழியை ஒலியடிப் படையிலும் பேச்சுமொழி எல்லைக் கோட்டின் (isogloss) படியும் பல்வேறு பிரிவாகப் பிரிக்கலாம்.

1. நாஞ்சில் நாட்டுப் பேச்சுத் தமிழ் :

இப்பேச்சுத் தமிழில் 'ற'கரம் ஒலியனுகக் காணப்படுகிறது. இப்பேச்சுத் தமிழ் தமிழ் நாட்டில் பேசப்படும் மற்றப் பேச்சுத் தமிழினின்றும் சிறிது வேறுபட்டது. இலங்கையில் பேசப்படும் யாழ்ப்பாணத் தமிழுக்கும் இப்பேச்சுத் தமிழுக்கும் ஓரளவு ஒலியியல், இலக்கண அமைப்பில் நெருக்கம் உண்டு.

| | |
|---|---|
| ஆச்சே | 'தினம்' |
| ஆச்சி | 'பாட்டி' |
| செம்மான் | 'சக்கிலியன்' |

நாஞ்சில் நாட்டுப் பகுதியை மூலவிடம் (Focal area....) என்பர். மொழியில் தோன்றும் மாற்றம் எங்காவது ஓர் இடத்தில் கிளைத்திருக்க வேண்டும். வேறுபாடு தோன்றும் அவ்விடத்தைத்தான் மூலவிடம் என்பர் கிளைமொழியாராய்ச்சியாளர் (Dialectologist...). இப்பேச்சுத் தமிழில் 'ற', 'ங' இவ்விரண்டும் ஒலியன்களாகும்.

வடக்கத்திய பேச்சுத் தமிழ் :

(செங்கல்பட்டு, சென்னை, வடஆர்க்காடு) இப் பேச்சுத் தமிழில் 'ழ'கரம் 'ய'கரமாக ஒலிக்கப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| பழம் | > | பயம் | 'பழம்' |
| கிழவன் | > | கெயவன் | |
| கிழவி | > | கெயவி | |
| இழு | > | இசு | |

'ழ'கரம் 'ச'கரமாகவும் ஒலிக்கப்படுகிறது. மேலும் வடார்க்காடு மாவட்டத் தலைநகரமான வேலூரில் 'இருக்கிறது' என்பதை 'கீது' என்றே கூறுகிறார்கள். முஸ்லீம்களின் செல்வாக்குக் காரணமாக இவ்வாறு வழங்கப்படுகிறது. 'அவர்கள்' என்பது 'அவுங்க' என்றே வழங்கப்படுகிறது.

தெற்கத்திய பேச்சுத் தமிழ் :

(மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம்.)

தென் மாவட்டங்களில் 'ழ'கரத்தை 'ள'கரமாகவே உச்சரிக்கின்றனர்.

பழம் > பளம்

'அவர்கள்' என்பது திருநெல்வேலி மாவட்டத்தில் 'அவிய' என்றே வழங்கப்படுகிறது. மதுரை மாவட்டத்தில் சாமான் என்பதை ஜாமான் என்றே உச்சரிக்கின்றனர். இராமநாத புரத்திலுள்ள செட்டி நாட்டுப் பகுதியில் 'பந்தல்' என்ருல், இறந்தவர்கட்குப் போடப்படும் பந்தலைத்தான் குறிப்பிடு கிருர்கள். இப்படிப்பட்ட வழக்கைக்கொண்டு பேச்சுமொழி எல்லைக் கோட்டால் (isoglosses...) அது வேறு பகுதியி னின்றும் வேறுபடுகிறது. திருநெல்வேலி மாவட்டத்தில் 'அண்ணுச்சி' என்பது அழைக்கும் சொல்லாக வழங்கப் படுகிறது.

கிழக்கத்திய பேச்சுத் தமிழ் :

(திருச்சி, தஞ்சாவூர், தென் ஆர்க்காட்டின் ஒரு பகுதி).

தஞ்சாவூர்ப் பேச்சுத் தமிழில் 'எண்பது' என்பதை 'எம்பளது' என்று கூறுகின்றனர். இப்பகுதியில் தான் 'ழ' கரத்தை 'ழ'கரமாகவே உச்சரிக்கின்றனர்.

| | |
|---|---|
| இம்மாம் | இந்த அளவு |
| ஆத்தா | அம்மா |
| மல்லாட்டெ | கடலை |

தென் ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள சிதம்பரம் பகுதியில் 'திருவிழா' 'திருவிஷா' என்றே வழங்கப்படுகிறது. 'ழ' கரம் 'ஷ'கரமாக உச்சரிக்கப்படுகின்றது.

மேற்கத்திய பேச்சுத் தமிழ் :

கோயமுத்தூர், சேலம், தர்மபுரி மாவட்டங்களில் பேசப் படும் பேச்சுத் தமிழில் 'ழ'கரம் 'ள'கரமாகவே உச்சரிக்கப் படுகிறது.

உழக்கு > உளக்கு
கோழி > கோளி

'அவர்கள்' என்பதற்கு 'அவிய' என்றே வழங்கப்படுகிறது. இப்பேச்சுத் தமிழில் 'ஞ'வுக்கும் 'ந'வுக்கும் அதிக வேறு பாடில்லை. ஈரோட்டுப் பகுதியில் 'ல'கரம் 'ள'கரம் இரண்டும் ஒன்ருகவே உச்சரிக்கப்படுகின்றது.

| | |
|---|---|
| அப்ளே | 'அப்பொழுது' |
| இப்ளே | 'இப்பொழுது' |
| எப்ளே | 'எப்பொழுது' |
| புள்ளே | 'பெண்' |
| ஆரியம் | 'கேப்பை' |
| கண்ணலம் | 'கல்யாணம்' |

மேலும் பெங்களூரில் பேசும் பேச்சுத் தமிழில் கன்னட மொழியின் செல்வாக்கையும் ஆந்திராவிலுள்ள ஹைதரா பாத்தில் பேசப்படும் தமிழில் உருது, தெலுங்கு மொழிகளின் செல்வாக்கினையும் திருவனந்தபுரம், பாலக்காடு ஆகிய விடங் களில் பேசப்படும் தமிழில் மலையாள மொழியின் செல் வாக்கையும் இலங்கையிலுள்ள யாழ்ப்பாணத் தமிழில் சிங்கள மொழியின் செல்வாக்கையும் காணலாம். பேச்சு மொழியை ஆராயும்பொழுது பொது மொழியை மிகக் கவனமாகப் பயன் படுத்தவேண்டும்.

இவற்றினின்றும் தொல்காப்பிய காலத்திலிருந்து இன்று வரை தமிழ்மொழி அடைந்த வளர்ச்சியை ஒலியியல் அடிப் படையில் ஓராற்ருன் அறியலாம்.

## SELECT BIBLIOGRAPHY

Agesthialingam, S. 1961 — Description of the Language of Patirruppattu, Ph. D. Dissertation, Kerala University.

Meenakshisundaran, T. P. 1964 — A History of Tamil language, Deccan College, Poona.

Shanmugam, S. V. 1971 — "Some Problems in Old Tamil Phonology", Indo-Iranian Journal Vol. XIII, Part 1.

Sakthivel, S. 1970 — Field Notes on Toda Language, Annamalai University.

Zvelebil, K. 1964 — "Spoken language of Tamil Nad", Archiv Orientalni, Vol. 32 No. 2

---

# திருமுறைக் குறிப்பு

[திருக்குறள்பீடம் குருகுலம் அழகரடிகள்]

திருமுறைகளில் தேவாரம் முதலில் உள்ளது. திருஞான சம்பந்தர் தேவாரத்தில் அவர் திருவாய் மலர்ந்தருளிய முதல் பாட்டு 'தோடுடைய செவியன்' என்று தொடங்குகிறது. இது அம்மையப்பர் வணக்கத்தை நினைவூட்டுகிறது. தோடு என்னும் சொல் அம்மையின் காதணியையும் செவியன் என்னும் முடிவு அப்பன் நினைவையும் ஒருங்கு தெரிவிக்கக் கூடியவை.

"தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண் மதிசூடி
காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளம் கவர் கள்வன்"

என்பன அப்பாடலின் இரண்டு வரிகள்.

இவற்றில் 'செவியன்' 'கள்வன்' என்பன ஒருவகை முடிவில் வந்தன. 'விடையேறி' 'மதிசூடி' 'பொடி பூசி' என்பன வேறுவகை முடிவுகள். முன் முடிபுகள் ஆண்பால் பெயர் விகுதிகள் உடையன. பின் முடிபுகள் பெயர் முடிபுகளா வினையெச்ச முடிபுகளா என்னும் ஐயம் உண்டாகலாம். இரு வகை முடிபுகளாகவும் அவை வரத்தக்கவை.

தனிச் சொற்களாக இருந்தால் இருவகைப் பொருள்களும் கொள்ள வாய்ப்புண்டு. தொடர்களாக இருப்பவை இரட்டுற மொழிதலாகக் கொள்ளலாம். ஆயினும் இரட்டுற மொழிதலெல்லாம் பெரும்பாலும் இடமில்லாத சுருக்கத்துக்கு ஏற்றவையாதலின் அவ்வகைப் பொருள்கோளுக்கு இங்கே இன்றியமையாமை இல்லை.

மேலும் ஒரு சொல்லுக்கோ ஒரு தொடருக்கோ ஒரு பொருள் திட்பம் அமைதலே சிறப்பு.

மற்றும் இருவர் மாறுகோள் ஒருதலைத் துணிதலும் முதன்மையாகும். ஏதாவது ஒரு வகையில் கருத்து துணியப் படல் வேண்டும். பாடலில் ஆசிரியர் கருத்து எவ்வகைத் துணிபுக்கும் இடந் தருகின்றது என்பது பயில்வோர் துணிதற்குரிய கடமை.

மேற்பாடலில் செவியன் எனவும் கள்வன் எனவும் முடிபுகள் வந்து இடையில் வேறுவகை முடிபுக்கு இடமாய் இருப்பதனுல் விடையேறி முதலிய தொடர்களை இயல்பான முடிபுக்குப் பொருள் துணிதலே தக்கது. ஆண்பாற் பெயர் விகுதி முடிபு போலவே இடையில் வந்தவற்றையும் ஆண்பாற் பெயர் முடிபுகளில் அமைக்க ஆசிரியர் கருதியிருந்தால் அவ்வாறே முடித்திருக்கலாம். அருளாசிரியர்க்குக் கவிதைத் திறன் ஓர் அருள் திறனுய் விளங்குவதாகும். ஆனுல் அவ்வாறு முடிக்கப் பெறவில்லை.

'ஏறி', 'சூடி', 'பூசி' என்பவை வினையெச்ச முடிபுகளாக இருப்பது இயல்பான முடிபு. அவற்றைப் பெயர் முடிபாகச் செயற்கையில் ஆக்குவதற்கு இன்றியமையாத காரணம் தேவை.

ஆனுல், இன்றியமையாக் காரணமாக இங்கே பொருள் கொள்வதற்கும் வினையெச்ச முடிபுகளே ஏற்றனவாய் உள்ளன. 'ஏறியும்', சூடியும், பூசியும் தோடுடைய செவியன் என் உள்ளம் கவர் கள்வனுய் விளங்குகிருன் என எச்சங்களைக் காரணப் பொருளாகக் கொள்ள வாய்ப்பிருக்கிறது.

---

## தமிழ்ச் சான்ருேர் மேற்கொண்ட முறை

இத் தமிழ் நாட்டிற் புதியராய்ப் புகுந்த ஆரியர், பௌத்தர், சமணர், மாயாவாத வேதாந்திகள், வைணவர் என்பாரெல்லாந் தமிழ் மக்களை மருட்டுதற் பொருட்டு, அவர் வழங்குந் தமிழ் மொழியிற் றம்முடைய கோட்பாடுகளை வரைந்து வையாமல், அவர் அறியாத வடமொழியில் அவை தம்மை வரைந்து வைத்து, அவைகளை மறைபொருளாகவே பரப்பி வந்தமையால், அன்னுர் செய்த ஏமாற்றத்தினின்றுந் தமிழ் மக்களை விடுவிக்கக் கருதிய பிற்காலத்துத் தமிழ்ப் பெரியோர்களும், பண்டைத் தமிழ்ச் சான்ருேர் கண்ட முடிந்த வுண்மைகளுக்குச் 'சைவ சித்தாந்தம்' என வடமொழியிற் சிறப்புப் பெயர் நிறுவியும், அவ் வுண்மைகளை விளக்குங்காற் பற்பல குறியீடுகளை வடசொற் கொண்டே புதியவாய்ச் சமைத்தும், வடமொழியிலேயே 'சிவாகமங்கள்', 'சிவ புராணங்கள்' இயற்றியுந் தமிழ்ச் சான்ருேர் தமது மெய்யறிவாற் றெளிந்த மெய்ப் பொருள்களை இத் தமிழ் நாட்டகத்தே பரவச் செய்யலாயினர்.

—மறைமலையடிகள்

''சைவசித்தாந்த ஞானபோதம்'' முகவுரை.

# பத்துப் பாட்டு-பாவலர்-புரவலர்

[வித்துவான் வீ. ப. கா. சுந்தரம், எம்.ஏ.,
இறையியற் கல்லூரி, மதுரை.]

சங்க நூல்களுள் பத்துப் பாட்டு, நெடும் பாடல்கள். அவற்றைப் பாடிய புலவர்கள் எண்மர்; அவற்றுள் புலவரால் போற்றப்படுகின்ற புரவலர்கள் அறுவர். (1) முருகாற்றுப் படையில் முருகனுடைய ஆறுபடை வீடுகளை நக்கீரர் புகழ் கின்றார். (2) பொருநர் ஆற்றுப் படையில் முடத்தாமங் கண்ணி யார் கரிகால் பெருவளத்தானைப் போற்றுகின்றார். (3) சிறு பாணாற்றுப் படையில் நல்லியக்கோடனைப்பற்றி நல்லூர் நத்தத்தனார் நவில்கின்றார். (4) பெரும்பாணாற்றுப் படையில் காஞ்சிமன்னன் இளந்திரையைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் போற்றுகின்றார். (5) மலைபடுகடாம் என்ற கூத்த ராற்றுப் படையில் நன்னனைப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார் வாழ்த்துகின்றார். பத்துப் பாட்டுள் மேற்கூறிய ஆறும் ஆற்றுப்படை நூல்களாகும். பெரும்பாணாற்றுப் படையைப் பாடிய உருத்திரங் கண்ணனாரே, கரிகால் பெரு வளத்தானைப் (6) பட்டினப்பாலையில் பாராட்டுகின்றார். (7) முல்லைப்பாட்டை நப்பூதனார் பாடுகின்றார். (8) ஆரியப் பிரகத்தனுக்குத் தெய்வீகக் காதல் களவொழுக்கத்தின் மண மாண்பை அறிவூட்டக் கபிலர் குறிஞ்சிப்பாட்டைப் பாடினார். (9) மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனாரும் (10) நெடுநல் வாடையில் நக்கீரரும்—பாண்டியன் நெடுஞ்செழியனையே தம் நூலுள் பாராட்டுகின்றார்.

பத்துப்பாட்டு-தமிழர்களின் பண்பாட்டு நூல். மன்னர் களின் கொடை, வீரம், இரக்கம், நாடுகாவல், நாட்டுவளம் பெருக்கல் முதலியவற்றைக் காட்டும் கலங்கரை விளக்கம். இச் செய்திகள் யாவற்றையும் சுட்டி விளக்கும் பாடல் வருமாறு :

பத்துப் பாட்டும் பாடிய பாவலரும் பாடல்பெறு புரவலரும்

(மோகனம் - திருப்புகழ்ச் சந்தம் - ஐம்மை நடை)

ஆறுபடை வீடுபுகழ்ந் தார் [1] முருகில் கீரனார்
ஆளுங்கரி காலைப் [2] பொரு நாற்றில் முடி கண்ணியார்
கூறு [3] சிறு பாணில் அருட் கோடனைநத் தத்தனார்
கூர்ஒலி [4] க டாம் நன்னனைக் கோரும் பெருங் கௌசிகர்

வேறு[5]பெரும் பாண் திரையை வேட்டுதிரங் கண்ணரே
வேந்துதிரு மாவளனைப் [6]பாலையிலும் பாடினர்
நாறுபெரும் [7]முல்லைதனை நாட்டினர்நப் பூதனர்
நற்கபில னுர் [8]குறிஞ்சி ஆரியனுக் கோதினர்
மாறுவெல்லும் நீள்செழியை மாங்குடியர் [9]காஞ்சியில்
மண்ணினர்நக் கீரருந்தம் [10]மாநெடுநல் வாடையில்
வீறுகொடை வீரம்அளி பண்பாட்டுப் பத்துமே
விள்ளரிய தெள்ளுதமிழ் அள்ளும்ஒளி முற்றுமே.

இப்பாடலுள்—பத்துப் பாட்டின் நூல்களும், அவற்றைப் பாடிய புலவர்களும், பாடல்பெறு புரவலர்களும் கூறப்பட்டுள்ளதால் - மாணவர்கள் மனனஞ் செய்து கொண்டால் என்றும் பயன்படும்.

---

புறக்கணிக்க இயலாத உண்மை!

"சதுர்மறைஆ ரியம்வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழிநீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமோ?"

என்றும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களின் கூற்று மொழிப்பற்றுமிக்க புலவர் கூற்று எனப் புறக்கணித்துவிடல் இயலாது. பரதகண்ட முழுவதும் பரவி வழங்கி வந்த பழந் தமிழோடு ஆரியம் கலப்புற்றுப் பல்வேறு கிளைமொழிகள் உருவாகியுள்ளன. வட இந்திய மொழிகள் தமிழ்க் குழு மொழிகளோடு வேறுபட்டனபோல் தோன்றினும், தமிழ் மொழி அடிப்படையிலேயே அவை உருவாகி வளர்ந்துள்ளன என்பது நுணுகி ஆராய்வார்க்குத் தெள்ளிதிற் புலனாகும். (Studies in Dravidian Philosophy Pages 9-10.)

—டாக்டர் சி. இலக்குவனர்

# முப்பெரும் புலவர்கள் நினைவு விழா

## க. திருநெல்வேலி

திக்கெலாம் புகழ் திருநெல்வேலி நகரில் அமைந்துள்ள தருமபுர மடாலயத்தில் சைவ சித்தாந்தக் கழகத்தின் தென்னிந்திய தமிழ்ச் சங்கச் சார்பில் முத்தமிழ் வித்தகர்களான *பெரும் புலவர் மூவரான தணிகைமணி டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை, பெருமழைப் புலவர் பொ. வே. சோமசுந்தரனர், பொறியியற் பேரறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர் ஆகியோரின் தமிழ்த் தொண்டைப் பாராட்டும் வகையில் முப்பெரும் புலவர்கள் நினைவு விழா 13-2-72 ஞாயிறன்று மாலையில் நடைபெற்றது.

நெல்லை மாவட்டக் கோட்ட ஆட்சித் தலைவர் திரு. சே. மா. கந்தசாமி அவர்கள் விழாவிற்குத் தலைமைதாங்கித் தமிழ்ப் பெரியார்களைப் பாராட்டிப் பேசினர்.

விழாத் தொடக்கத்தில் கழக ஆட்சியாளர் தாமரைச்செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் அனைவரையும் வரவேற்றபோது தணிகைமணியவர்கள் நெல்லையில் ஓராண்டுக்காலம் பணியாற்றியுள்ளதால் நெல்லையோடு தொடர்புடையவர்கள் என்ருர். மாணிக்க நாயக்கரும் நெல்லை மாவட்டத்தில் பல சொற்பொழிவுகளை ஆற்றியுள்ளதாகத் தெரிவித்தார். பெருமழைப் புலவர் தொடர்பு கழகத்திற்குக் கிடைத்திராவிட்டால் பழந்தமிழ் நூல்களனைத்திற்கும் ஒருசேரப் புத்துரை கண்டிருக்க முடியாது என்ருர்.

தலைமை யுரையாற்றிய திரு. சே. மா. கந்தசாமி அவர்கள் "தமிழ் வளர்ச்சிக்காகவே தங்கள் வாழ்க்கையையும் உயிரையும் எவ்வளவு சிறந்த முறையில் ஈடுபடுத்த வேண்டுமென்பதற்கு எடுத்துக்காட்டாக இருந்த முப்பெரும் புலவர்கட்கு இன்று விழாவெடுக்கிருேம். தமிழ்த்தாயின் சிறப்பை மிகுத்துக் கூறும் வகையில் இவ்விழா நடைபெறுகின்றது. தமிழுக்குத் தொண்டாற்றி இம் முப்பெரும் புலவர்கள் மறைந்துவிட்டார்கள். அவர்கள் சென்ற வழியில் நாமும் செல்ல வேண்டுமென்பதற்கே இவ்விழா அமைக்கப்பெற்றிருக்கின்றது. இங்கே அமைந்துள்ள காட்சியில் இப்பெரும் புலவர்கள் எழுதிய நூல்கள் இருக்கின்றன. அவை வெறும் காட்சிக்காக வைக்கப் பெறவில்லை. அவை அனைத்தும் கருத்துக்

---

* முன்னவர் இருவரும் 25-8-71, 3-1-72இல் முறையே காலமானவர்களென்பதும், மூன்ருமவர் 1931இல் காலமாகி இப்போது பிறந்து நூருண்டு நிரம்பியுள்ளவரென்பதும் அறிதற்பாலன.

கருவூலங்கள். அவற்றை நாம் படித்துப் பயன் பெறவேண்டு'' மென்றார்.

தணிகைமணி யவர்களின் திருஉருவப்படத்தைத் தூய சவேரியர் கல்லூரிப் பேராசிரியர் திரு. இரா. பொன்னரசு, எம்.ஏ., பி.டி. திறந்துவைத்து ''அவர் பெரிய உரையாசிரியர், ஒரு சிறந்த எழுத்தாளர், அழகிய ஆன்மிக நெறி நூல்களுக்கு ஒளிநெறி, ஒளிநெறிக் கட்டுரைகளை வகுத்தளித்தவர், மாமேதை என்று மட்டுமல்லர்; ஒரு மாபெரும் மனிதராகவே அவரை நான் காண்கிறேன். சமயத்திற்காகப் பாடுபடுவர்கள் மிகக் குறைவு. சமயங்கள் கூறுவதை மக்களுக்கு எடுத்துக் கூறுபவர்கள் அதைவிடக் குறைவு. தணிகைமணியவர்கள் தம் நூல்கள் வழி எவ்வளவு உயர்ந்த தத்துவங்களைக் கொண்டது சமயம் என்பதைக் காட்டியுள்ளார்கள். அதனால் தான் அவரை மாபெரும் மனிதர் என்கிறேன்'' என்று பாராட்டினார்.

இந்துக் கல்லூரிப் பேராசிரியர் பெ. தியாகராசன், எம்.ஏ., பெருமழைப் புலவர் படத்தைத் திறந்துவைத்து உரை யாற்றினார். இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற உரை வேந்தர் பெருமழைப் புலவர் சோமசுந்தரனார் என்று அவர் பாராட்டினார். பெருமழைப் புலவரைப் பண்டைப் பெரும் உரையாசிரியர்களோடு ஒப்பிட்டுப் பேசிய அவர் பழந்தமிழ் நூல்களுக்குள் மறைந்து கிடக்கும் மாணிக்கங்களை வெளிக் கொணர்ந்தவர் பெருமழைப் புலவர் என்றார். நச்சினார்க் கினியர் மூல நூலாசிரியரின் சொல்லைத் திரித்துக் கூறிய இடங்களில் பெருமழைப் புலவர் அவரைத் திருத்தி மூல நூலாசிரியரின் உண்மையான கருத்தை எடுத்துக் கூறிய பெருஞ்சிறப்பு பெருமழைப் புலவருக்குத்தான் உண்டு. முற்கால பிற்கால உரையாசிரியர்களைப் பெருமழைப் புலவர் வென்றுவிட்டார். மேலைநாட்டு வித்தகர்களையும் இந்நாட்டுப் பேராசிரியர்களையும் தம் உரைகளில் பெருமழைப் புலவர் மேற்கோளாகக் காட்டியுள்ளார் என்றார் அவர்.

நெல்லைநகர் மன்றப் பொறியர் திரு. வீ. சுந்தரவரதன் அவர்கள் பொறியியல் அறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள் படத்தைத் திறந்துவைத்து ''இத்தகைய பெரியாரின் படத்தைத் திறப்பது என்போன்று பொறியியல் துறையில் பணியாற்றுபவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்று எண்ணு கிறேன். அவர் மாமலை. பொறியியல் துறையில் சிறந்து விளங்கியதோடு மட்டுமன்றித் தமிழ்த் துறையிலும் சிறந்து

# முப்பெரும் புலவர்விழா

## க. திருநெல்வேலி (13-2'-72)



1. பேராசிரியர்கள் இரா. பொன்னரசு, பெ. தியாகராசன்.
பொறியர் வீ. சுந்தரவரதன், புலவர் சிவசம்பு

2. கழகஆட்சியாளர், நெல்லைமாவட்டக்கோட்ட ஆட்சித் தலைவர்
திரு. சே. மா. கந்தசாமி, பேராசிரியர், பொ. முத்தரசு

## உ. மதுரை (20-2-'72)



தமிழவேள் பொ. தி. இராசன், ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை; டாக்டர், சி.இலக்குவனர்; திரு.வி.முத்துக்கிருட்டிணன்; பாவலர். வீ. பா. கா. சுந்தரம், எம். ஏ., கழக ஆட்சியாளர் ஆகியோர்

## ரு. திருச்சி (21-2-'72)



கழக ஆட்சியாளர்; திருவாட்டி விருத்தாம்பாள் சிவப்பிரகாசம்; திரு. சா. பெரியசாமி; பொ. துரைசாமி; ஊரன் அடிகள், பேரா. ரம்போலா மாஸ்கரேனஸ்; பேரா. செ. பாலசுப்பிரமணியம்

விளங்கியிருக்கிறார்கள். அவரை இந்நாள் பொறியர்க ளெல்லாரும் வழிகாட்டியாக வைத்துக்கொண்டு இருதுறை களிலும் உழைக்க உறுதிகொள்ள வேண்டும்'' என்று பாராட்டுரை பகன்றார்.

அடுத்துச் சிறப்புரை யாற்றியவர் சிரீவைகுண்டம் குமரகுருபரர் கல்லூரி முதல்வர் பேராசிரியர் திரு. பொ. முத்தரசு, எம்.ஏ., பி.டி. அவர்கள். 'தமிழே தம் உயிர்மூச்சு' என்று வாழ்ந்த மூன்று புலவர் பெருமக்களை நாம் மறந்துவிடக் கூடாது என்பதற்காகவே கழகத்தோடு தொடக்க காலத்தி லிருந்து தொடர்புடைய தாமரைச்செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் இவ்விழாவை ஏற்பாடு செய்துள்ளார்கள். இவர்கள் இந்த விழாவை ஏற்பாடு செய்யாது போயிருந்தால் இப்புலவர் பெருமக்களை நாம் அறிந்தே யிருக்கமாட்டோம். இவ்விழாவைப் போல இன்னும் பல பெரிய புலவர்களின் நினைவு விழாக்களையும் அவர்கள் ஏற்பாடு செய்து புலவர்களின் பெருமையை மக்களுணரச் செய்யவேண்டும் என்று அவர் பேசினார்.

விழா இறுதியில் கழக ஆட்சியாளர் நன்றி தெரி விக்கும்போது தனித்தமிழ் உணர்ச்சியை ஊட்டக்கூடிய சில நிகழ்ச்சிகளைத் தணிகைமணியவர்கள், மாணிக்க நாயக்க ரவர்கள் வாழ்க்கையிலிருந்து எடுத்துக் கூறியபின் விழா இனிது நிறைவேறியது.

## உ. மதுரை

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில் தணிகைமணி டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை, பெருமழைப் புலவர் உரைவேந்தர் பொ. வே. சோமசுந்தரனார், பொறியியற்பேரறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர் ஆகிய முப்பெரும் புலவர்களின் நினைவு விழா 20-2-72ஆம் நாள் தமிழவேள் திருமிகு பொ. தி. இராசன் அவர்கள் சீரிய தலைமையில் கொண்டாடப்பெற்றது.

திருப்புகழ்ச் செல்வர் திரு. வே. திருப்பதி அவர்களால் இறைவணக்கம் பாடப்பெற்றது. தாமரைச்செல்வர் திருமிகு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் முப்பெரும் புலவர்களின் செயற்கரிய செயல் மேம்பாடுகளை எடுத்துரைத்து, விழாவுக்கு வந்திருந்த பெருமக்கள் அனைவரையும் அகமுவப்ப வரவேற்றார்.

தலைவர் தமிழவேள் அவர்கள், தமக்கும் தணிகை மணிக்கும், மாணிக்கனார்க்கும் இருந்த பழைய தொடர்புகளை நினைவு கூர்ந்து முன்னுரையாற்றினார். தணிகைமணி அவர்களின் திருவுருவப் படத்தை உரைவேந்தர் திருமிகு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் திறந்துவைத்து 'ஒளிநெறி, அமைப்பதன் அருமையையும் பெருமையையும் விரித்துரைத்து. ஒரு பல்கலைக் கழகம் செய்தக்க பணியை ஒருவர் தம் வாழ்வில் செய்தமையை வியந்து பாராட்டினார்.

டாக்டர் சி. இலக்குவனார் அவர்கள் பெருமழைப் புலவர் திருவுருவப் படத்தைத் திறந்துவைத்து, "இருபதாம் நூற்றாண்டில் தமிழ்நெறி தவறாமல் உரை கண்ட நச்சினார்க் கினியர்" என்று குறிப்பிடத்தக்க பெருமைக்குரியவர் பெரு மழைப் புலவர் என்றும், அத்தகையவர்க்குப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' பட்டம் வழங்கியிருத்தல் வேண்டும் என்றும் எடுத்துரைத்து, உரை நயங்களைப் பாராட்டினார்.

தமிழ்நாடு தொழில் நுட்பக் கல்லூரி விரிவுரையாளர் திரு. மு. முத்துக்கிருட்டிணன் அவர்கள் பா. வே. மாணிக்க நாயக்கர் திருவுருவப் படத்தைத் திறந்துவைத்து, 'முத்தின் வயிற்றில் பிறந்த மாணிக்கம்' என்று கூறி மாணிக்கச் செயல்களையும், ஆராய்ச்சிகளையும் விளக்கினார். அவர் தம் 'கணக்கியல்' (Calculograph) நூலையேனும் உலகம் அறிய உடனே வெளியிடவேண்டும் என்று கழக ஆட்சியாளர் அவர்களை வேண்டிக்கொண்டார்.

பாவலர் திருமிகு வீ. ப. கா. சுந்தரம் எம்.ஏ. அவர்கள் முப்பெரும் புலவர்களின் சீர்மையைப் பொதுவாக எடுத் துரைத்து, அவர்கள் ஒப்பரும் செயல்செய்தற்கு அடிப்படையாக இருந்தவர் தாமரைச்செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்களே. ஆதலால் அவர்களையும், சைவ சித்தாந்தக் கழகத்தையும் நன்றியோடு பாராட்டுதல் நம்மவர் கடமை என்றுரைத்துப் பாராட்டிப் பாமாலையுடன் இசைத்தார். இறுதியில் கழக ஆட்சியாளர் அவர்களின் நன்றியுரையுடனும் திரு. திருப்பதி அவர்களின் மொழி வாழ்த்துடனும் விழா இனிது நிறைவுற்றது.

விழா மண்டபத்தில் முப்பெரும் புலவர்களின் நூல்களும், படங்களும், எழுத்துப் படிவங்களும் கண்கவர் வகையில் காட்சிக்கு வைக்கப்பெற்றிருந்தமை அறிஞர் பெருமக்கட்குப் பெருவிருந்தாக இருந்தமை குறிப்பிடத்தக்கது.

## ங. திருச்சி

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கமும் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகமும் இணைந்து அச்சங்கத்தின் சொந்தக் கட்டி டத்தில் அமைந்துள்ள அழகான சொற்பொழிவுக் கூடத்தில் முப்பெரும் புலவர்கள் நினைவு விழா 21-2-72 திங்கள் மாலையில் நடைபெற்றது. விழாவிற்குத் திருச்சி நகரத் தமிழ்ப் பெருமக்கள் திரளாக வந்திருந்தனர்.

விழாத் தொடக்கத்தில் சிங்கப்பூர்ச் சிறுமியர் செல்வி, மாதவி, குணு ஆகிய மூவரும் இறை வணக்கப் பாடலைப் பாடினர். விழாவைத் தொடங்கி வைத்து அவ்வப்பொழுது பேச்சாளர்களை அழகிய தமிழில் அறிமுகப்படுத்தி வைத்தவர் சங்கப் புலவரான திரு சா. பெரியசாமி அவர்கள்.

கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் அவர்கள் தம் வரவேற்புரையில் முப்பெரும் புலவர்களின் சிறப்புக்களை எடுத்துக் கூறி அவர்களோடு தமக்கிருந்த நெருங்கிய தொடர்பை விளக்கிக் கூறினுர்கள். அவர்களோடு தொடர்பு ஏற்பட்டிருக்கா விட்டால் அவர்களுடைய சிறப்பைப் புலமையைத் தமிழகம் அறிந்திருக்க முடியாது என்றுர். அத்தகைய புலவர்களை நாம் மறந்துவிடக் கூடாது. அவர்களுடைய நூல்களை யெல்லாம் எல்லோரும் வாங்கிப் பயன்படுத்த வேண்டும் என்றுர் அவர்.

திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர் உதவியாளர் திரு பொ. துரைசாமி அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கிச் சிறப்புற நடத்தினுர்கள். பெரியார்களின் படங்களைத் திறக்கும் போது அப்பெருமக்களைப் பற்றிய உணர்ச்சி நமக்கு ஏற்பட்டு அவர்கள் சென்ற வழியில் நாம் நடப்பதற்குத் தூண்ட வேண்டும். தேவார திருவாசகங்களிலுள்ள கருத்துக்களைத் தொகுத்துக் கொடுத்தவர் தணிகைமணி அவர்கள். தேவாரம் என்றுல் ஏதோ தோத்திரப் பாடல் என்று தான் எல்லோரும் நினைக்கிறேம். அதில் அரிய கருத்துக்கள் அடங்கி யுள்ளன என்று எடுத்துக் காட்டியவர் தணிகைமணி. அறிவியல்கலைச் சொற்களைத் தனித்தமிழால் உண்டுபண்ணிக் காட்டியவர் மாணிக்க நாயக்கர். நல்ல அருமையான சங்க நூல்களுக்கு உரை யெழுதியவர் பெருமழைப் புலவர். மூவருடைய படங்களையும் திறக்கும்போது அவர்களுடைய வாழ்க்கை வரலாறு தெரிவது மட்டுமல்ல அவர்களுடைய தமிழுணர்ச்சி, தமிழ்ப் புலமை ஆகியவற்றில் ஓரளவாவது நாம் பெற வேண்டும் என்றுர் அவர்.

அருட்டிரு ஊரனடிகள் அவர்கள் தணிகைமணி ஐயா அவர்களின் படத்தைத் திறந்து வைத்துப் 'பெரிய அரசாங்க உத்தியோகத்திலிருந்து கொண்டு தமிழுக்கு லாபம் கருதாது தொண்டாற்றியவர்கள் தணிகைமணி. அவர்கள் தமிழுக்கு இரண்டு பெரிய ஆக்கங்களைக் கொடுத்துள்ளார்கள். ஒன்று முருகவேள் பன்னிரு திருமுறை. மற்றொன்று திருமுறைகளுக்கு ஒளிநெறி. சிவபெருமானுக் குள்ளதைப்போல முருகனுக்குள்ள பாடல்களைத் தொகுத்துப் பன்னிரு திருமுறையை வகுத்தார். அதன்பின் பன்னிரு திருமுறைகளில் முதல் ஒன்பது திருமுறைகளுக்கு ஒளிநெறியும் ஒளிநெறிக்கட்டுரையும் வகுத்துள்ளார்கள். ஒரு பல்கலைக் கழகத்தில் பலர் கூடிச் செய்ய வேண்டிய வேலை. அப்பணியை ஒருவராக இருந்து செய்தார்கள். அந்த அரிய நூல்களைக் கழகம் உடனுக்குடன் வெளியிட்டுத் தமிழுக்குப் பெருந்தொண்டாற்றியுள்ளது. அவர்களை நமக்கு அறிமுகப்படுத்துவது சைவ சித்தாந்தக் கழகந்தான். அக்கழகம் தோன்றுவதற்கு முன் தமிழ் இருந்தநிலை வேறு. இப்போதிருக்கிறநிலை வேறு. தமிழ் உணர்ச்சியும் தமிழ் ஆராய்ச்சியும் சென்ற நூற்றாண்டை விட இந்த நூற்றாண்டில் வளர்ந்திருக்கிற தென்றால் அதற்குப் பெருங் காரணம் சைவசித்தாந்தக் கழகம்தான் என்று உரையாற்றினர்.

பெருமழைப் புலவர் படத்தைத் தேசீயக் கல்லூரிப் பேராசிரியர் திரு செ. பாலசுப்பிரமணியம், எம். ஏ. அவர்கள் திறந்து வைத்துப் பாராட்டினர்கள்! 'பெருமழைப் புலவர் தமிழுக்குப் பெருமழையாக விளங்கியவர். எங்களுக்கு விளங்காத நச்சினர்க்கினியருரையெல்லாம் விளங்கவைத்தவர் அவர். தாம் கண்ட கருத்துக்களை எளிய உரையின் மூலம் மாணவர்களும் புரிந்து கொள்ளச் செய்ய வேண்டுமென்று எண்ணினரே அந்த உள்ளத்தைப் பாராட்ட வேண்டும். நச்சினர்க்கினியரோடு ஒத்தவராக எண்ணக்கூடிய வகையில் பெருமழைப் புலவர் சிறந்த உரையாசிரியர். எளிமையாக அதேநேரத்தில் நயம்கெடாது உரை யெழுதியவர் அவர். சில நூல்களுக்குத் தாமே புத்துரை எழுதியும் பழையனவற்றை எளிமையாக்கியும் தந்த பெருமை அவருக்கே யுரியது.

மாணிக்க நாயக்கரின் படத்திறப்பு திருவாட்டி விருத்தாம்பாள் சிவப்பிரகாசம் அவர்களால் நிகழ்த்தப் பெற்றது. அவரைப் பாராட்டிப் பேசிய அம்மையார் 'மாணவருலகம் அவர் வாழ்க்கையிலிருந்து பின்பற்ற வேண்டியது அதிகமுள்ளது'

என்றார். பொறியியல், சோதிடம், அறிவியல், தமிழ்மொழி ஆராய்ச்சி போன்ற பல துறைகளில் நாயக்கர் சிறந்து விளங்கியது போல இக்கால மாணவர்களும் எல்லாத் துறைகளிலும் சிறந்து விளங்க வேண்டும் என்றார்.

தூய யோசப்புக் கல்லூரிப் பேராசிரியர் திரு. ரம்போலா மாஸ்கரேனஸ், எம். ஏ. அவர்கள் சிறப்புரை நிகழ்த்தினார்கள். 'ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பொது மக்களின் இயக்கத்தை நடத்திக் கொண்டிருப்பவர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள். இவர்களைப் போல் தமிழ்மேல் உறுதியான பற்றுள்ளம் கொண்டவர்கள் வேறு யாரும் இல்லையெனலாம். இவர்களைப் போல் பயனுள்ள நூல்களைக் கடந்த ஐம்பது ஆண்டுகளாக வெளியிட்டவர்கள் யாருளர்?

இப்பெரியவர்கள் படங்களை நாமெல்லாம் பார்க்க வாய்ப்புக் கிடைத்ததே இவர்கள் முயற்சியால் தான். இப்படங்களையெல்லாம் சிறு அளவில் வெளியிட்டு இப்புலவர் பெருமக்களின் பெருமையை மக்கள் உணரச் செய்ய வேண்டும். அவர்கள் வரலாறுகள் விரிவாக வெளிவர வேண்டும் என்று அவர் தம் உரையில் குறிப்பிட்டார்.

கழக ஆட்சியாளர் அவர்கள் நன்றி கூற விழா இனிது முடிந்தது.

---

## புகழ்

காலம் என்னும் பேரேட்டின் பக்கங்களில் எத்தனையோ சிறப்புடையவர் பெயர்கள் எழுதப்பெற்று வருகின்றன. ஆனால், ஒரு பெயர் எழுதப் பெறும்போது மறுபெயர் அழிய, அல்லது மங்கிவிடப்படுகிறது. ஆனால், இவற்றிடையேயும் ஒரு சில என்றுமழியா ஒளியெழுத்துக்களாக இலங்குகின்றன.

—லாங்ஃபெல்லோ

# செய்திகளும் குறிப்புக்களும்

## டாக்டர் நாவலருக்குப் பாராட்டு விழாவில் புத்தகப் பேழை—பரிசு

தமிழகக் கல்வி அமைச்சர், மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கட்கு மதுரைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கியதைப் பாராட்டுமுகத்தான் 19-2-'72 இல் சென்னைப் புதுக்கல்லூரியில் சென்னை மாநகரத் தமிழாசிரியர் கழகச் சார்பில் விழாவொன்று நடந்தது.

சென்னைக் கந்தசாமிக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் மா. கி. தசரதன் அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கினுர். பேராசிரியர் நடேசன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினுர். பேராசிரியர்கள் வில்வபதி, பாண்டுரங்கன், டாக்டர் சஞ்சிவி. கல்லூரிக் கல்வி இயக்குநர் சிட்டிபாபு ஆகியோர் நாவலருக்குப் புகழ்மாலை சூட்டினர்.

விழாவில் டாக்டர் நாவலரவர்கட்குப் பண்டைத் தமிழின் தொன்மையும் சிறப்பும் உணர்த்தும் கழக வெளியீடுகள் ஐம்பதைக் கொண்ட அழகிய தேக்குமரப் பேழை அன்பளிப்பாக அளிக்கப்பட்டது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

ஆசிரியர்கள், ஆசிரியைகள், மாணவர்கள், பொதுமக்கள் ஆகியோர் ஏராளமாக வந்திருந்து விழாவைச் சிறப்பித்தனர். டாக்டர் நாவலர் அவர்கட்கு நமது உளமார்ந்த வாழ்த்தினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

## தியாகராயர் கல்லூரி தமிழ்மாணவர் மன்ற முத்தமிழ் விழா

சென்னை, சர். தியாகராயர் கல்லூரித் தமிழ் மாணவர் மன்றச் சார்பில் 3-3-'72 இல் முத்தமிழ் விழாச் சிறப்புற நடைபெற்றது. தமிழக மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன், எம். ஏ. அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்தனர். சட்டமன்றத் தலைவர் மாண்புமிகு கே. ஏ. மதியழகன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கிச் சீரிய உரையாற்றினர். இவ்விழாவினையொட்டிக் கழக வெளியீடான திருக்குறள் தெளிவுரை 1800 படிகள் மாணவர்கட்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டன.

இத் தமிழ் மாணவர் மன்றம் திரு கே. இராசகோபாலன், எம். ஏ., எல். டி., டிப். இன்., எஃகான் அவர்களைத் தலைவராகவும், பேராசிரியர் ம. இராசமாணிக்கம், எம். ஏ , அவர்களைத் துணைத் தலைவராகவும், திரு. ச. சாம்பமூர்த்தி அவர்களை மாணவர் தலைவராகவும், திரு ஆ. இராசமாணிக்கம் அவர்களைத் துணைத் தலைவராகவும், திரு அ. ஆ இராமரத்தினம், க. கலைமணி ஆகியோரை முறையே செயலாளராகவும் துணைச் செயலாளராகவும் கொண்டு சீரிய தமிழ்ப் பணியாற்றி வருகின்றது. மூத்தமிழ் யாண்டும் பரவ இம்மன்றத்தின் பணி பெரிதும் பயன்படுமென நம்புகிறோம்.

வாழ்க தமிழ் மாணவர் மன்றம்!

சிறக்க அதன் பணிகள்!!

## நீதிமன்றத்தில் தமிழ்

"நீதி மன்றத் தீர்ப்புக்களைத் தமிழில் எழுதுவது எளிதாக இருக்கும்; தமிழ்மொழியில் அதற்குச் சரியான சொற்கள் இருக்கின்றன" என்று சென்னை உயர்நீதி மன்ற நடுவர் திரு. எஸ். மகராசன் அவர்கள் 23-2-72 இல் நாகை வழக்கறிஞர் சங்கக் கூட்டத்தில் பேசியபோது குறிப்பிட்டார்.

நடுவரவர்கள் கூறியுள்ள இக்கருத்து பெரிதும் வரவேற்கத்தக்கது. எல்லாம் தமிழால் முடியும் என்று கூறப்படும்போது சட்டத்துறை மட்டும் அதற்கு விலக்காகலாமா? அதுமட்டுமன்று, பொதுமக்கள் பலரும் ஆங்கிலம் அறியாத காரணத்தால் சட்டத்துறையில் பெரிதும் இடர்ப்படுகின்றனர். இவ்விடர்ப்பாடு நீங்க வேண்டுமானால், வழக்கறிஞர் என்ன கூறுகிறார் — நடுவர் என்ன கூறுகிறார் என்பனவற்றை எல்லாரும் புரிந்துகொள்ளும் வாய்ப்பு உண்டாதல் வேண்டும். அங்ஙனமின்றி நீதிமன்றம் என்றால் ஆங்கிலம் கற்றவர்க்கே உரிய இடம் என்ற நிலை நீடிக்குமானால் தமிழ்மொழியும் வளராது, தமிழரும் நீதி-அநீதிகளைப் புரிந்துகொள்ள முடியாது. எனவே நீதிமன்றத் தீர்ப்புக்கள் தமிழில் அமைதலே நீதியாகும்.

## புத்தகக் காட்சி

அனைத்துலகப் புத்தக ஆண்டை யொட்டி, சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் நான்கு நாள் புத்தகக் காட்சி ஒன்று 25 2-72இல் துவங்கப் பெற்றது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் எஸ். ஜி. மணவாள இராமாநுஜம் அவர்கள் இக்காட்சியைத் துவக்கி வைத்தார். இவ்விழாவையொட்டி மற்றொரு நிகழ்ச்சியின்போது திரு. சி. ஜி. ரெட்டியவர்கள் அன்பளிப்பாகக் கல்லூரிக்கு 1500 புத்தகங்களை வழங்கினார். திரு மணவாள இராமாநுஜம் அவர்கள் விலங்கியல் நூல் தொகுப்புக்களை வழங்கினார்.

இங்ஙனம் அவ்வப்போது கல்வி நிலையங்கள்தோறும் புத்தகக் காட்சிகள் நடைபெறுமானால் அவை மக்களின் கவனத்தைக் கவர்ந்து புத்தகம் படிக்கும் பழக்கம் பெருகும்.

## சோழர் காலத்து நாணயங்கள்

சோழர் காலத்து நாணயங்கள் பற்றிய சிறப்புக் கண்காட்சியொன்று சென்னை எழும்பூர் பொருட்காட்சிச் சாலையில் வைக்கப்பட்டுள்ளன. இப் பொருட்காட்சி கடந்த 29-2-72 முதல் ஒரு திங்கள் வரை வைக்கப்பட்டிருக்கும்.

சோழ மன்னர் நாணயங்கள் வெளியிட்டது தொடர்பான அரிய செய்திகள் கல்வெட்டுக்களின் வாயிலாகக் கிடைத்துள்ளன. முதலாம் இராசராச சோழன் காலத்திலிருந்த உத்தமச் சோழன் காலத்தில் வெளியிடப்பட்டதாக ஆராய்ச்சியாளர்களால் கருதப்படும் நாணயங்கள் காணப்படுகின்றன. முதலாம் இராசேந்திரன் காலத்திய நாணயங்களில் இரண்டுவித நாணயங்கள் உள்ளன. ஒன்றில் இராஜேந்திரர் என்றும், மற்றொன்றில் கங்கைகொண்ட சோழன் என்றும் பெயர்கள் காணப்படுகின்றன.

இத்தகைய வரலாற்றுத் தொடர்புடைய கண்காட்சிகள் பெருகுமானால் படிக்காத மக்களும் ஓரளவு வரலாற்று அறிவினைப் பெற இயலும்.

## 'மனோன்மணீயம்' போன்ற சிறந்த இலக்கிய நாடகத்திற்குப் பரிசு ரூ 1000 கால நீட்டிப்பு

பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களின் 'மனோன்மணீயம்' போன்ற சிறந்த நாடகங்கள் மேலும் பல வெளிவருதல் வேண்டும் என்னும் நோக்கத்துடன், அத்தகைய சிறந்த கவிதை இலக்கிய நாடகம் எழுதும் ஆசிரியர்களை ஊக்குவிக்கு முகத்தான், கடந்த சித்திரைத் திங்கள் (மே, 1971) செல்வி இதழில் (சிலம்பு சரு, பரல் கூ) ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தோம். அவ்வறிக்கையில் 'மனோன்மணீயம்' போன்ற சிறந்த இலக்கிய நாடகம் இயற்றும் ஆசிரியருக்குப் பரிசாக ரூபா ஆயிரம் வழங்குவதென்றும், 31-3-1972க்குள் நாடகம் எழுதியனுப்பி வைத்தல் வேண்டுமெனவும் அறிவிக்கப்பட்டிருந்ததை அன்பர்கள் அறிவர்.

எமது வேண்டுகோட்கிணங்கிக் குறித்த காலத்திற்குள் ஆசிரியர் சிலர் மட்டும் நாடகங்களை அனுப்பிவைத்துள்ளனர். எனினும் சிலர் மேலும் சிறிது கால நீட்டிப்புத் தேவை எனக் கேட்டுள்ளனர். அவர்கள் விரும்புவதை ஏற்று நாடகம் அனுப்பும் கால எல்லையை 30-6-72 வரை நீட்டித்துள்ளோம். அறிஞர் பெருமக்கள் இக்காலத்தை நன்கு பயன்படுத்தி எமது எண்ணம் ஈடேறும் வண்ணம் நல்ல நாடகங்களை உருவாக்கி 30-6-72க்குள் அனுப்பி வைக்கும்படி வேண்டுகிறோம்.

இவ்வறிவிப்பினைக் கண்ணுறும் ஆசிரியர்கள் பிற ஆசிரியர்கட்கும் அறிவித்து இந்நாடகப் போட்டியினை வெற்றிபெறச் செய்யத் துணைபுரியுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ சுப்பையா.



# சிங்கப் பிடரைச் சீண்டிய சிறுமை

புலவர் இரா. இளங்குமரன்,
தலைமைத் தமிழாசிரியர்,
முக்குலத்தோர் உயர்நிலைப்பள்ளி,
திருநகர், மதுரை.

அமைதி வாழ்வை அழிக்கும் போரை அழிக்கு மாறு வேண்டினேம்
அமைந்த சீலம் ஐந்து கூறி அவனி யெங்கும் முழங்கினேம்
இமையுள் வைத்த பாவை போல என்றும் அமைதி காத்தனம்
நமக்கு வையம் நல்கி யுள்ள நல்ல பரிசு காணிரோ !

கேடு மிக்க பாகித் தானர் கேட்டை என்ன சொல்வதே
கோடி மக்கள் நாடி ழந்து கொடுமை யாக வந்தனர்
ஆடு வெட்டு தொட்டி போல ஆளை வெட்டி மாய்த்தனர்
ஓடித் தேடி ஓங்கும் அறிஞர் உயிரைப் போக்கிக் களித்தனர் !

வங்க நாடு வாழ்க ! எங்கள் தங்கம் வாழ்க வாழ்கவே !
எங்கள் வாழ்வை அடிமை யாக்க எண்ணு கின்ற வீணரைச்
சிங்கம் போலத் தாக்கி வெற்றிச் சீர்த்தி கொள்வோம் நாமெனப்
பொங்கித் தாவும் வெள்ளம்போலப் போருக் கெழுந்தார் வங்கரே.

வங்க நாட்டார் உணர்வைப் பேணும் வழியை விட்டுச் செருக்கினல்
நங்கள் இனிய பார தத்தை நலிக்கு மாறு சூழ்ச்சியால்
மங்குல் வானில் மறைந்து வந்து குண்டு போட்டுத் தாக்கினர்
சிங்கப் பிடரைச் சீண்டி விட்ட சிறுவன் தப்பி உய்வனே ?

ஆனை எற்றின் அடுக்குப் பானை அழிவி னின்று தப்புமோ ?
பூனை சூடு போட்டுக் கொண்டால் புலியைப் போலத் தாக்குமோ?
மீனைப் போல நீரில் செல்ல மேவும் எறும்புக் காகுமோ ?
வானை வெல்ல வல்லார் முன்னே வந்த பேயர் வாழ்வரோ ?

பசுமி தித்த காளான் பின்னும் பழைய படியே நிற்குமோ ?
கொசுவி றக்கை குத்து வாளைக் குலைக்கும் ஆற்றல் எய்துமோ?
பிசுபி சுத்த கொள்கை கொண்ட பேதைப் பாகித் தானியர்
பசுமை மிக்க பார தத்தைப் பகைத்துத் தப்பக் கூடுமோ ?

சுற்று சூறைக் காற்றில் பட்டுச் சுழலும் பஞ்சு போலவே
உற்ற கருவி உரிமை செல்வம் ஊர்தி யெல்லாம் போகவும்,
முற்று தீயில் முட்டு விட்டில் முடிவு போலச் சாகவும்,
பெற்ற உயிரைப் பேணிச் சிலரே பேடித் தனமாய் ஓடினர்.

ஐம்பத் தாறு கோடி மக்கள் ஆவ ரேனும் ஒருவராய்
வம்புக் கொருவன் வந்துவிட்டால் வரிந்துகட்டி நின்றொரு
கொம்பன் யானை போலப் பகையைக் குத்திச் சாய்க்கக் கூடிடும்
நம்பற் குரிய நமது பண்பு வாழ்க வாழ்க வாழ்கவே !

செருக்கி னாலே சினந்து வந்து சிதைந்து பட்ட போதிலும்
தருக்கி நிற்கும் தன்மை இன்னும் தளர்ந்த பாடு கண்டிலோம்
இருக்கு மிடமும் இழக்க வெண்ணி எழும்பி வந்து வீணிலே
முருக்கி நிற்கும் மூடற் கின்றே முடிவு காலம் வந்ததோ ?

---

## மதியாதாரை மதியோம்

வங்காளதேஷ் நாட்டின் விடுதலை உணர்வை மதியாது கொடுமைகள் பல செய்த பாகித்தானுடன் எத்தகைய உறவும் வைத்துக் கொள்ளமாட்டோம். மகாத்மா காந்தியடிகளின் அறநெறிக் கொள்கைகளையே பின்பற்றி வருவோம்.

வங்காளதேஷ் குடியரசுத் தலைவர்
ஷேக் முஜிபுர் ரகுமான்
(பிரிட்டிஷ் தலைமை அமைச்சரிடம் தெரிவித்த கருத்து)

செந்தமிழ்ச் செல்வி பற்றிய உரிமை விளக்கம்-1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4 இல் கண்டுள்ளபடி

---

1. வெளியிடும் இடம் : 1/140, பிராட்வே, சென்னை-1.

2. வெளியீட்டு முறை : திங்களிதழ்

3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்
இனம் : இந்தியர்
முகவரி : 2/140, பிராட்வே, சென்னை-1.

4. வெளியீட்டாளர் பெயர் : திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்டு.
இனம் : இந்தியர்
முகவரி : 1/140, பிராட்வே, சென்னை-1.

5. ஆசிரியர் பெயர் : திரு. வ. சுப்பையா பிள்ளை
இனம் : இந்தியர்
முகவரி : 6, பவழக்காரத் தெரு, சென்னை-1.

6. இதழ் உரிமையாளர்கள், மூலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக்காட்டிற்கு மேற்பட்ட பங்குடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும் :

1. திரு T. S. இராமலிங்கம் பிள்ளை, M. A., B. L.
ஓய்வு பெற்ற சட்டத்துறைச் செயலாளர், சென்னை-4.

2. திரு வ. சுப்பையா பிள்ளை
6, பவழக்காரத் தெரு, சென்னை-1.

3. திருமதி சு. மங்கையர்க்கரசி அம்மாள்
6, பவழக்காரத் தெரு, சென்னை-1.

4. திரு R. M. S. கோபாலகிருஷ்ண பிள்ளை
நிலக்கிழார், சாத்தான்குளம்,
(திருநெல்வேலி மாவட்டம்)

5. திரு M. K. சிவகாமிநாத பிள்ளை
நான்காவது மாடி, புரோச் கட்டிடம்,
பிரின்சஸ் தெரு, பம்பாய்-2.

6. திரு N. S. சுந்தரம், பார்-அட்-லா,
134, தெற்கு இராச வீதி, தூத்துக்குடி.

7. திரு மு காசிவிசுவநாதன் செட்டியார்
வங்கியார், பாகனேரி, (இராமநாதபுரம் மாவட்டம்)

8. திருமதி கா. லட்சுமி ஆச்சி
(திரு. காசிவிசுவநாதன் செட்டியார் மனைவி)
பாகனேரி.

9. திரு. பெரி. அழ. மு. நா. நாராயணன் செட்டியார்
உரிமையாளர், பாரி அச்சகம், 127, பிராட்வே, சென்னை.

10. டாக்டர் அழகப்ப செட்டியார்
கல்வித்துறை அறக்கட்டளை,
காரைக்குடி.

11. திருமதி க. வடிவழகி
(திரு. இரா. கலியாணசுந்தரம் மனைவி)
3, மேட்டுத் தெரு, சென்னை-1.

12. திருமதி வள்ளியம்மை ஆச்சி
(திரு. N. பழனியப்பன் மனைவி)
கொப்பனுபட்டி, பொன்னமராவதி,
(திருச்சி மாவட்டம்)

13. திருமதி மு. வயிரமணி
(திரு இரா. முத்துக்குமாரசாமி மனைவி)
3, மேட்டுத் தெரு, சென்னை-1.

14. திருமதி பழ. மீனாட்சி ஆச்சி
(திரு. S. M. பழனியப்ப செட்டியார் மனைவி)
11, ரட்லண்ட் கேட், 2-வது தெரு,
சென்னை-6.

15. திரு S. Ct. சிதம்பரம் செட்டியார்
162, அவினுசிசாலை, கோயமுத்தூர்-1.

16. திருமதி வள்ளியம்மை ஆச்சி
(திரு. கண்ணப்ப செட்டியார் மனைவி)
நாட்டரசன் கோட்டை, (இராமநாதபுரம் மாவட்டம்)

17. திரு T. S. ஜம்புலிங்கம் செட்டியார்
திருப்பூர் இல்லம், கோயமுத்தூர்.

18. திரு Rm. K. Rm. இராமசாமி செட்டியார்
திட்டை, (தஞ்சை மாவட்டம்)

19. திரு. இரா. கலியாணசுந்தரம்,
3, மேட்டுத்தெரு, சென்னை-1.

20. திரு. இரா. முத்துக்குமாரசாமி
3, மேட்டுத்தெரு, சென்னை-1.

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் எனது முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என வ. சுப்பையா பிள்ளையாகிய யான் உறுதியளிக்கிறேன்.

12—3—1972

(ஒப்பம்) வ. சுப்பையாபிள்ளை
பதிப்பாளர்

# கழகப் புதிய வெளியீடுகள்

## மறைமலையடிகளார் உரைமணிக்கோவை

ஆசிரியர் : மறைமலையடிகள்

இந்நூலின்கண் ஆசிரியர் மறைமலையடிகளார் அவ்வப்போது எழுதிய அரிய கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. கட்டுரைகள் அனைத்தும் சிறந்த அறிவுக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. ஆராய்ச்சியாளர்கள் எழுத்தாளர்கள் பேச்சாளர்கள் ஆகியோருக்கு இந்நூல் தக்க வழிகாட்டியாய் அமையவல்லது. நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய சிறந்த கட்டுரைத் தொகுப்பு நூல் இதுவே. விலை ரூ. 5 00

## சிவபெருமான் புகழ்நூற் கோவை

சிவபெருமான்மீது பாடப்பட்டுள்ள பாடல்கள் பல இருப்பினும் எல்லாரும் எளிதில் ஓதி வழிபாடியற்றுதற்கு ஏற்ப இச் சிறு தொகுப்பு நூல் ஆக்கப்பட்டுள்ளது. சைவ நன்மக்களின் இல்லங்களிலும் மாணவர்களிடத்தும் இன்றியமையாது இருக்க வேண்டிய நூல் இதுவே. விலை காசு 60

## வழிபாட்டுக்குரிய திருப்புகழ்த் திரட்டு

முருகனை வழிபடுவார்க்குத் திருப்புகழ் இன்றியமையாததொரு வழிபாட்டு நூலாகும். ஆனால், அப்புகழ்ப்பாக்கள் மிகப் பலவாக இருப்பதால் அவற்றைக் கற்றலும் ஓதலும் கடினமாகும். எனவே, திருப்புகழ்ப் பாக்களுள் சுவையும் பயனுமிக்க பாக்கள் சிலவற்றை இந் நூலின்கண் தொகுத்து வெளியிட்டுள்ளது கழகம். விலை காசு 25

## வழிபாட்டுக்குரிய திருவருட்பாத் திரட்டு

இராமலிங்க அடிகள் அருளிய அருட்பாடல்கள் அனைத்தும் படித்து இன்புறத்தக்கன. ஆயினும் அவற்றுள் ஒரு சிலவே மனப்பாடம் செய்தற்கும் ஓதி வழிபடுவதற்கும் ஏற்ற இனிமையும் எளிமையும் உடையன. அத்தகைய பாடல்களின் சிறு தொகுப்பே இந்நூல். விலை காசு 25

# வெளிவரவிருக்கும் கழக வெளியீடுகள்

திருவருட்பாப் பெருந்திரட்டு விலை ரூ. 12 50

சிவப்பிரகாச சுவாமிகள் பனுவல் திரட்டு (குறிப்புரையுடன்) 8 75

முத்துவீரியம்—விளக்கவுரை: புலவர் கு. சுந்தரமூர்த்தி

புறத்திரட்டு (புதிய பதிப்பு)

இலக்கண விளக்கம்—விளக்கவுரை : புலவர் சேயொளி

திரு இசைப்பா ஒளிநெறி—டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை

முருகவேள் பன்னிரு திருமுறை (2ஆம் தொகுதி)
டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை

தனிப்பாடல் திரட்டு 5ஆம் புத்தகம்—குறிப்புரை : சு. அ. இராமசாமிப் [புலவர்

நன்னூல்-Nanual (தமிழும் ஆங்கிலமும்)
—Rev. H. Bower & Lazarus

பதிவு எண்: M. 4899

## பிற பதிப்பாளரின் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| இயற்கை இன்பம்—ம. வி. இராசேந்திரன், எம்.ஏ. | 2 | 00 |
| உலகத் தமிழ் —நெ. து. சுந்தரவடிவேலு, எம். ஏ., எல். டி. | 2 | 00 |
| தென்குமரியின் புதைந்த வரலாறு —எஸ். பத்மநாபன் | 4 | 00 |
| தற்கால இந்திய சமயற் கலை-பகுதி 1 —மனோரமா ஏகாம்பரம் | 4 | 75 |
| பிரிவுக் கோடு—மா. இரா. இளங்கோவன், எம்.ஏ. | 4 | 50 |
| மகரந்தங்கள்—பெருங்காப்பியன் | 5 | 00 |
| இலக்கிய உலகில் அண்ணா —நாகை தருமன் | 5 | 00 |
| கோட்டுப் பூக்கள்—பகவதி பாண்டியன் | 4 | 00 |
| மனிதனுக்கு முன் —D. சலாவுதீன், பி. எஸ். ஸி., பி. டி. | 2 | 25 |
| போராட்டங்கள்—ர. சு. நல்லபெருமாள் | 14 | 00 |
| உறவுக்குப் பிரிவில்லை —வித்துவான் கவியழகன், எம். ஏ. | 3 | 25 |
| நித்திலவல்லி—நா. பார்த்தசாரதி | 10 | 00 |
| கண்மதியன் கவிதைகள் | 3 | 00 |
| கலைஞர் காவியம்—அண்ணாதாசன் | 3 | 00 |
| கவியரங்கில் கலைஞர் —டாக்டர், கலைஞர். மு. கருணாநிதி | 6 | 00 |
| தைத் திங்கள்—சுந்தர சண்முகனார் | 3 | 00 |
| காதல் காவியம்—கவிஞர் இ. சு. முத்துசாமி | 2 | 50 |
| உணர்வின் விழிப்பு —லட்சுமி சுப்பிரமணியம் | 6 | 00 |
| The Concept of culture —Dr. V. Raghavan | 2 | 00 |
| Science of Human Development : Bhavad Gita —Complied and Edited by T. S. Avinasilingam | 1 | 25 |

அப்பர் அச்சகம், சென்னை-1